*Ūḻiyaṉ*

*Malar 7, itaḻ 6*

*October 19, 1926*

Record no. 148

சென்னைப் பதிவு எண் ௧௫௦௧.　　தனி இதழ் விலை அணா ஒன்றரை　　தந்தி விலாசம்:—"OCLIAN"

# ஊழியன்

சந்தா விபரம்.
வருடச் சந்தா ... ௫—0—0
ஆறுமாதச் சந்தா ... ௩—0—0
வெளிநாடு வருடச் சந்தா ௬—0—0

செவ்வாய்தோறும் நிகழ்வது.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

விளம்பர விகிதம்.
அங்குலம் ௧-க்கு வாரம் ௧-க்கு 0—௪—0
நீதிமன்ற விளம்பரம் அங். ௧ ௧—0—0
ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக்காரியஸ்தருக்கு எழுதவும்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். —திருக்குறள்.

மலர் ௭.　　காரைக்குடி. அட்சய-ஹு ஐப்பசி-மீ ௩-௨ (௧௧—௧௦—௨௧)　　இதழ் ௧

## மலர் மணம்.

### சொல்லும் செயலும்.

(வ. ரா.)

காலஞ்சென்ற கிச்சினர் பிரபு சென்ற ஐரோப்பியப் போர்க் காலத்தில், ஆங்கில நாட்டின் யுத்த மந்திரியாகவிருந்தார். அவரிடம் பழகிய யாவரும் அவரைப்பற்றிச் சிறப்பாக ஒன்று மட்டும் கூறுகின்றார்கள். "கிச்சினர் பிரபு 'சொல் செட்டு' உடையவர்" என்பது அவருடன் பழகியவர்களின் தீர்ப்பாகும். ஒரு விஷயத்தைக் குறிப்பிடுவதற்கு, அதற்குப் பொருத்தமாயுள்ள சில சொற்களே போதுமானவையாகும். எனவே "சொல் செட்டு" உடையவர்களுக்குப் பேசத்தெரியாது என்று கூறத்துணிவது தகாது. சொற்களின் உயிர்த் தன்மையை உணர்ந்தவர்கள், சொற்களைக் கண்டபடி செலவழிக்க, மனம் ஒருப்படமாட்டார்கள்.

* * *

"தான்தேடாத பொருளுக்கு மாற்றுமில்லை, உறையுமில்லை" என்று சொல்லுவதுண்டு. அதாவது கஷ்டப்பட்டுச் சம்பாதிக்காதஒருவன் கையில் ஏராளமாகப் பொருள் சிக்கிக்கொண்டால், அதைப் பயன்படுமுறையில் செலவழிக்கவேண்டும் என்று அவன் தீர்மானம் கொள்ளமாட்டான். அவனிடம் பொருள் வந்ததும் எளிதான மார்க்கம் மூலமாக; அவனிடமிருந்து பொருள் எளிதிலே போய்விடும் தன்மையும் படைத்ததாகும். ஒரு பொருளின் அருமையை அறியாதவன், அந்த சாமானை எத்தகைய இழி துறையிலும் உபயோகப்படுத்திக் கொள்ளுவான்.

* * *

சொல் எதற்காக ஏற்பட்டது? உள்ளத்தின் உணர்ச்சியை வெளிக்காட்டுவதற்கே சொல் தோன்றிற்று. இப்பொழுதோ, சொல் கேவலமான துறைகளிலும் உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றது. உள்ளத்தை மறைக்க, இப்பொழுது சொல்லை, மனிதர்கள் உபயோகிக்கும் நிலைக்கு, அவர்கள் வந்துவிட்டார்கள். உள்ளத்தை மறைத்து வெளிக்காட்ட உபயோகப்படுத்தப்பட்டுவரும் சொற்கள் உள்ளத்தின் உணர்ச்சியை வற்றிப்போகும்படி செய்துவிட்டன.

* * *

கப்பல் ஒன்றுக்குத் தேர்ந்த மாலுமி ஒருவர் இருந்தார். அவர் நல்லவர், யோக்கியர். அந்த மாலுமி நடத்திய கப்பல், புயல் காற்றில் அகப்பட்டுக்கொண்டு, மூழ்கிப்போயிற்று. எனவே அவருடைய ஏழைக் குடும்பத்துக்குச் சோற்றுக்கு வழியில்லை. இறந்த மாலுமிக்கு அனுதாபக்கூட்டமொன்று கூட்டப்பெற்றது. கூட்டத்தில் சொற்பொழிவு நிகழ்த்திய யாவரும் இறந்த மாலுமியின் குணங்களைப் புகழ்ந்து பேசி, அவருக்காகத் தாங்கள் பெரிதும் வருந்துவதாகத்தங்கள் பேச்சை முடித்துக்கொண்டார்கள். அனுதாப உணர்ச்சி, அனுதாபச்சொல்லாக மாறிவிளங்கிற்று.

ஏட்டுச் சர்க்கரைக்கு இனிப்புண்டா? எழுத்து அனுதாபத்துக்குப் பொருள் உண்டா? அனுதாபச் சொற்களைக் காது புளிக்கும் வரையில் கேட்டுக்கொண்டிருந்த முதியவர் ஒருவர், "மாலுமி யோக்கியர். அவர் தமது கடமையைச் செய்கையில் உயிர் துறந்தார். அவருடையஏழைக்குடும்பம்ஆதரவின்றித்தவிக்கின்றது. எனவே இறந்த மாலுமியிடம் எனக்கு இருக்கும் மதிப்பையும்அனுதாபத்தையும் தெரிவித்துக்கொள்ள, பத்துப்பவுன் நன்கொடையளிக்கின்றேன்" என்று பேசி, பத்துப்பவுனைக் கூட்டத்தின் தலைவரிடம் கொடுத்துவிட்டார். முதியவர் பேசிய சொற்களுக்குப் பொருள் உண்டு, பயனுண்டு. ஏனையோர்களின் நீண்ட சொற்பொழிவுகளுக்குப் பொருள் இல்லை. தவிர, சொற்களின் பெருக்கில் அகப்பட்டுக்கொண்டு, அவர்கள் தங்களுடைய உள்ளத்தை அறவே மறந்து விட்டார்கள்.

* * *

நமது நாட்டிலே உள்ளத்தை மறைக்கும், உள்ளத்தின் ஊற்று உணர்ச்சியை வற்றச் செய்யும் சொற்கள் மலிந்துவருகின்றன. கடவுளை அறியாதவர்கள் "கடவுள்" என்று ஓலமிடுகின்றார்கள். பழமையை அறியமுடியாதவர்கள் பழமை என்று உள்ளம் பதறுகின்றார்கள். சாத்திரத்தைத்தினைபளவும் பயிலாதவர்கள், சாத்திரம் என்றுகூவி அலைகின்றார்கள். முன்னேற்றம் என்பது இன்னதென்று சிறிதும் விளங்காதவர்கள், முன்னேற்றப் பல்லவி சதா பாடிக்கொண்டிருக்கிறார்கள். புதுவாழ்வின் தன்மையையும் இலட்சணங்களையும் உணராமல், அதைப்பற்றி வாய்ப்பேச்சுப் பேசுகின்றார்கள். செயல்திறனில்லாத மனிதர்கள் தங்கள் சொல்திறனை வெளிக்காட்ட முன்வந்துள்ளார்கள்

* * *

திருவள்ளுவரின் குறள் மதிக்கப்பட்டுப் போற்றப்படுவதன் காரணமென்ன? குறளில் சொல் சோர்வு சிறிதுமில்லை. பொருள் விகாரமுமில்லை; பொய்யுமில்லை. சொல்லுக்கு வலிமையளிப்பது அதன், பொருளும் அது தாங்கி நிற்கும் உண்மையுமாகும். பொருளும் உண்மையும் இல்லாத சொற்கள் சொற்களல்ல; அவைகள் வெறும் ஒலிகளாகும், கூச்சலாகும். ஒரு மணங்கு நிறையுள்ள சொற்களைக் காட்டிலும், ஒரு குண்டுமணிச் செயல் உயர்ந்ததாகும். ஒரு வண்டி சொற்களைத் தாறுமாறாக உபயோகப்படுத்துவதைக் காட்டிலும், பொருளும் உண்மையும் நிறைந்த, அச்சாணிகளான சில சொற்களை உபயோகிப்பது உயர்ந்த முறையாகும், சரியான முறையாகும்.

* * *

"வாய்ப்பேச்சில் பயனில்லை" என்று கூறினால், செயல் செய்யும்வகையறியாதவர்கள், "சொல்லுக்குப்பின்தானே, செயல் வரும்" என்று சமாதானம் கூறுகின்றார்கள். சொல்லுக்குப்பின் செயல் என்று கூறுவதற்கு, சொல்லின் பயன் செயல் என்று கொண்டு, எவரும் ஏமாந்து போக வேண்டாம். செயலைவிளக்கிக் காட்டுவது சொல்; அதைத்தவிர சொல்லுக்கு வேறுவகை நற்பயன்கிடையாது. சொல்லுக்குப்பின் செயல் என்பதற்குப்பொருள் என்ன? வெறும் சொல்லின் பயனற்றதன்மையைக் கண்டு உணர்ந்த பின்னர், மனிதர்கள் செயலை நாடுகின்றார்கள் என்பது மேற் கூறிய சொல் தொடருக்குப் பொருள் ஆகும். செயலைத்தூண்டுவதும் செயல் ஒன்றேயாகும். தவறான சொல்லிலிருந்து தெளிவான சொல் தோன்றக்கூடும். தவறான செயலினின்றும், நேர்மை கொண்ட செயல் தோன்றுவது இயல்பு. ஆனால் சொல்லினின்றும் செயல் தோன்றும் என்று கூறுவது இருளினின்றும் ஒளிதோன்றும் என்று சொல்லுவதற்குச் சமமாகும்.

* * *

நமது நாட்டிலே சொற்களும் அவைகளின் வழித்தோன்றல்களாகிய வாதங்களும் கட்சிகளும் மலிந்துவருவதற்குக் காரணமென்ன? செயல் திறனும் செயல் திட்டமும் இல்லாமையே காரணமாகும். செயல்திறன் என்பது பிறவிக்குணமா? செயல் திறன் பிறவிக்குணமல்ல செயல் திறனுக்கு வேண்டிய சாதனங்கள் யாவை? வாழ்வில் இனிப்பு இருக்கிறவர்களுக்கும், வாழ்க்கையை ஊன்றிக்கவனிப்பவர்களுக்கும் தங்கள் உணர்ச்சியைச் சிதற அடித்துக் கொள்ளாதவர்களுக்கும் செயல் திறன் எளிதிலே வரும். இதிலே சந்தேகம் எழுக்கும் வேண்டாம். குடித்தனம் நடத்துபவர்கள் யாவருக்கும் செயல் திறன் ஒவ்வோர் அளவிலே இருந்துவருவதை நாம் எல்லோரும் பார்க்கிறோம்.

* * *

செயல் திறன் என்பது என்ன? மனிதர்களைக்கூட்டி ஒன்று சேர்ப்பது செயல்திறனாகும். பலதிறப்பட்ட மனிதர்களை ஒன்று சேர்த்து, அவர்களுடைய வல்லமையைப் பயன்படுமுறையில் செல்லுமாறு அண்டச் செய்வதுசெயல்திறனாகும். மனிதஉள்ளத்தின் மேடு பள்ளங்களை உணர்ந்து, அவைகளுக்கு ஏற்ற செயல்களைச் செய்யத்தூண்டி, உயர்நிலை எய்துமாறு முயலுவது செயல் திறனாகும். வாழ்க்கையில் மலிந்துகிடக்கும் பதர்களை நிகழ்ச்சி என்ற காற்றின் உதவியால், தூற்றிக்களைபவர்களுக்கு செயல் திறன் உண்டு.

* * *

இக்காலத்தில் நமது நாட்டில் எந்தக்கூட்டத்தாரிடம் செயல் திறன் இருக்கப்பெறுகின்றது? இந்தியர்களை ஆளும் அதிகாரவருக்கத்தினரிடம் தான் செயல் திறன் இருக்கின்றது. அதனாலேதான், அதிகாரவருக்கத்தினரின் ஆதிக்கத்தை, இந்திய தேசபக்தர்கள் குலைக்க முடியவில்லை. அதிகாரவருக்கத்தினர் காண்பிக்கும் செயல்திறனை, தேசபக்தர்களும் காண்பிப்பார்களானால், சுயராஜ்யம் என்பது ஒரு ஆண்டு வேலையல்ல; சுயராஜ்யம் ஒரு மாதத்தில் வந்துவிடும்.

* * *

செயல் திறனற்ற கட்சிகள் நாட்டிலே ஆயிரம் இருந்தாலும் பயன் ஒன்றும் விளையாது. தங்கள் மனத்தை நன்கு உணர்ந்து, வாழ்வின் நுட்பத்தையறிந்து, ஜனசமூகத்தின்கண் நிறைந்த அன்பு கொண்டு, எஃகைப்போல, உள்ளத்தின் உறுதிகொண்டு, புதுவாழ்வின் தேவையையும் போக்கையும் தெளிவாகக் கண்டு, தீர்மானத்துடன் வாழ்க்கை நடத்த முயலுபவர்கள் பத்துப்பேர்கள் இருந்தாலும் போதுமானது. அவர்கள் நாட்டின் நிலைமையை அடியோடு மாற்றமுடியும். மௌனமாக, இலட்சக்கணக்கில் போர் வீரர்களைப் படைத்தகிச்சினர்பிரபுவின் செயல் திறன் எங்கே? மழையைப்போலப்பிரசங்கம் செய்துவரும் இந்தியத்தலைவர்களின் செயல்திறன் எங்கே?

* * *

"சொல்லால் முழக்கிலோ சுகமில்லை." செயலை நாடவேண்டும்; செயலைத்தாங்க வேண்டும்; செயலுக்கு முந்த வேண்டும்.

# மூட வழக்கங்கள்.

தெளிந்த ஆராய்ச்சி அறிவில்லாத சாதாரண ஜனங்கள் செய்யும் பயனற்ற செயல்களே மூடவழக்கங்களாம். பெரும்பாலும் அறிவில்லாதவர்களே இம்மூட வழக்கங்களில் பெரிதும் ஆழ்ந்திருப்பவர்கள். அறிவுள்ளவர்களிலும் ஒரு சிலர் குருட்டு நம்பிக்கையால் இக் கண்மூடி வழக்கங்களை ஆசரிப்பதும் உண்டு. இவை பரம்பரைப் பாத்தியமாகப் பொது ஜனங்களிடையே வளர்ந்துவருகின்றன. உலகத்தில் கல்வியறிவில்லாத ஜனங்களே மிகுந்திருக்கின்றபடியால், பலவகையான கண்மூடி வழக்கங்கள் தொலையாது நிலைபெற்று நிற்கின்றன. இக்குருட்டு வழக்கங்கள் அர்த்தமின்றி மூடநம்பிக்கையினால் செய்வனவேயாம். இம்மூடக் கொள்கைகளை ஏற்படுத்தியவர்கள் அறிவிலாத பாமர ஜனங்களே. இவ்வுண்மையை உணராமையினாலேயே, அறிவுள்ளவர்களிலுங்கூட ஒரு சிலர் இவைகளில் ஈடுபடுகின்றனர்.

சாதாரண ஜனங்கள், இம்மூடக் கொள்கைகள் அறிவுடைய பெரியோர்களால் முன்னாளில் ஏற்படுத்தப்பட்ட இனிய கொள்கைகள் என்று திண்ணமாக நம்புகின்றனர். எனவே, இவைகளை விடாப்பிடியாகக் கைக்கொண்டு அன்றோரிற் பலர் பெருமகிழ்வுடன் ஆசரிக்கின்றனர். கூர்த்தமதியுடன் ஆராய்வார்க்கு இவை மூடர்களால் வழங்கப்பட்ட மூட வழக்கங்களே என்பது நன்கு புலப்படும். இவ்வழக்கங்கள் இருக்கும் வரையில் ஒரு ஜனசமூகம் ஒரு போதும் முன்னேற்றம் அடையமுடியாது. வருந்தத்தக்கவாறு, சமூகத்தினரில் பெரும்பான்மையானவர் அறிவுக் கண்ணைத் திறந்து பாராது மூடவழக்கங்களுக்கு அடிமைப்பட்டு வாழ்வைக் கெடுத்துக்கொள்ளுகின்றனர்.

அவர்களுடைய பிள்ளைகளும் இக் குருட்டு வழக்கங்களுக்கு அடிமைப்பட்டுத் துன்புறுகின்றன. எனவே, அறிவு வளர்ச்சிக்கும் ஜனசமூக முன்னேற்றத்திற்கும் இடையூறாகவுள்ள குருட்டு வழக்கங்களை ஆராய்ந்து பொது ஜனங்களுக்கு, அர்த்தமில்லாத இச்செயல்கள் தள்ளத்தக்கன என்று எடுத்துக்காட்டுவது அவசியமாகும். ஒரு சமூகம் முன்னேற்றம் அடைதல் என்பது பணத்தினாலும், பெரிய மாளிகைகளினாலும் உயர்ந்த ஆடைகளினாலும் அணிகலன்களாலுமன்று. இவை இடம்ப வாழ்வைப் பெருக்கும் புறநாகரிகமே. அகநாகரிகமாகிய வழக்க ஒழுக்கங்களை அறிவாராய்ச்சிகளுக்கேற்ப உயர்ந்த முறையில் திருத்திக்கொள்வதே முன்னேற்றத்திற்குரிய முக்கிய செயலாகும். புறநாகரிகத்தோடு அகநாகரிகமும் மிளிர்ந்தாற்றான் வாழ்வாகிய பொன்மலர் மணமுடையதாய்ப் பொலியும். நடை, உடை, பாவனை, பேச்சு, செயல், வழக்கங்கள் அனைத்தும் செம்மையாக அமைக்கப்பட்டிருத்தலே நாகரிகமுறையாகும்.

இம்மூட வழக்கங்களில் ஆடவர் பெண்டிர் ஆகிய இருபாலாரும் அழுந்தியேயிருக்கின்றனர்கள். பெண்மக்கள் தான் மூட வழக்கங்களுக்கு உறையுளாக—ஆணிவேராக விளங்குகின்றனர்கள். காரணம் நீண்டநாளாகப் பெண்பாலார் கல்வியறிவு பெறாது மூடநம்பிக்கைகளிலேயே திளைத்து வருவதே யாகும். எல்லோரும் குருட்டு வழக்கங்களை எள்ளி நகையாடி விடுதற்பொருட்டே, இக்கட்டுரை எழுதப்பெறுகின்றது. எனவே, அன்பர்கள் தலைப்பெயரைப்பார்த்தவுடன் கட்டுரையின்மீது வெறுப்புக்கொள்ளுதல் வேண்டாம். பின்னர் வரிசையாக எழுதப்பெறும் விநோதமான விஷயங்களைக் கருத்துடன் படித்து உண்மையை உணர்வார்களாக.

## கோடங்கி பார்த்தல்.

சாதாரண ஜனங்கள் தமக்கு நோய் வறுமை முதலியன வந்தகாலத்தும், தாம் நினைத்தகாரியங்கள் முடியாத காலத்தும், பொதுவாகத் துன்பம் நேரிட்ட பொழுதும் கோடங்கி பார்க்கச் செல்லுகிறார்கள். கோடங்கி பார்க்கும் பாமரன் கண்ணைக்குடித்துவிட்டு, ஒரு எட்டுக்கட்டு, பிரம்பு, சோழிப்பை ஆகியவைகளை வைத்துக்கொண்டு ஒரு இடத்தில் அமர்ந்திருக்கின்றான். ஜனங்கள் வெற்றிலைபாக்குத் தக்ஷிணை வைத்து நாடிவந்த விஷயத்தைக் கேட்கிறார்கள். அவன் தலைவிரி கோலமாய் ஆடிக்கொண்டு உடுக்கை அடிக்கிறான். சிறிது நேரம் சிறு தெய்வ வரிசையை உரத்துக்கூவி, "மாரியாயி, காளியாயி, காட்டேறி, கருப்பய்யா" என்று அழைக்கிறான். பிறகு பல விஷயங்களையும் புலம்புகின்றான். ஜனங்கள் அதனை அருட்புலம்பலாகக்கொண்டு, தங்களுக்குப் பிடித்த ஒரு வார்த்தை இரண்டு வார்த்தையை எடுத்துக்கொண்டு சரியென்று தலையாட்டுகிறார்கள். அவனும், அவர்கள் வாயிலிருந்தும் சைகையிலிருந்தும் விஷயத்தை ஒருவாறு உணர்ந்துகொண்டு தனது அருள்மொழிகளை வெளியிடுகின்றான். ஒரு மாடு களவு போய்விட்டது என்று வைத்துக் கொள்வோம். மாட்டுக்குச் சொந்தக்காரன் கோடங்கிக்காரனைவந்து விஷயத்தைக்கேட்கிறான். கோடங்கிக்காரன் முதலில் பல விஷயங்களை உளறுகிறான். பின்னர், "நாலுகால் ஜீவன் ஒன்று களவு போய்விட்டதப்பா" என்கிறான். கேள்விக்காரன், "ஈம்" என்று ஒத்துக்கொள்ளுகிறான். பின்னர், "அது ஒரு பசுவாயிருக்குமப்பா" என்று உடுக்கை ஒரே அடியாய் அடிக்கிறான். கேள்விக்காரன், "இல்லையே! நன்றாகப்பார்த்துச்சொல்ல வேணும்" என்கிறான். பின்னர், தலைவிரிகோலமாய் ஆடி, உடுக்கைப் பல அடியாக அடித்து, "அது ஒரு வண்டிமாடாய் இருக்கவேண்டும் அப்பா" என்கிறான். கேள்விக்காரனும் "ஆம் ஆம்" என்கிறான். பிறகு, அவன், "இவ்வூருக்குப் பத்து நாழிகை வழியில் ஒரு இடத்தில் அது ஒருவனிடத்தில் இருக்குதப்பா" என்கிறான். கேள்விக்காரன், "அது அகப்படுமா" என்று ஆவலுடன் கேட்கிறான். அதற்கு அவன், "தேடியலைந்தால் பத்து நாளையில் அகப்படும் அப்பா" என்கிறான். கேள்விக்காரன் சந்தோஷமாக அவனுக்குக் காணிக்கை செலுத்திவிட்டுச் செல்லுகிறான். கேள்விக்காரர் வாயிலிருந்தும், குறிப்பிலிருந்தும் ஒருவாறு அன்னோர்விரும்பும் விஷயத்தை உணர்ந்து கொண்டு வாயில் வந்ததைக்கோடங்கிக்காரன் உளறுகின்றான். சாதாரண ஜனங்கள் இவ்வுளறு தலைத்தெய்வத்திருவாக்காகக் கருதிப்பெரிதும் மகிழ்கின்றனர். இது பைத்தியக்காரத்தனமன்றோ? இம்மூட நம்பிக்கையைக் களைய வேண்டியது அவசியமல்லவா?

## குறிகேட்டல்.

கோடங்கி பார்ப்பதைப்போல் குறிகேட்டலும் ஒரு விநோதமான விஷயமாகும். நமது நாட்டில் குறி சொல்லுதலையே பிழைப்பாகக் கொண்டிருப்பவர்களும் பலர் இருக்கின்றனர். குறி சொல்லுவோரும் வாயில் வந்தவைகளையே பொருத்தமாகக் கேட்பவர் மகிழும்படி உளறுகின்றனர். வீடு கட்குப்பிச்சை வாங்கவரும் குடுகுடுப்பைக்காரன், மயிற்பீலித்சோகைக்காரன், அழகர் கோயில் சாமியாடிகள், நல்லதங்காள்பாட்டுப்பாடுவோர் ஆகியவர்களிற் பலர் குறிசொல்வதுண்டு. குறிகேட்பதில் பெரிதும் ஆர்வம் உள்ளவர்கள் பெண்மக்களே. குறி சொல்லுவோர், பெண்மக்களிடையே, "மறுவருஷத்தில் உனக்கு ஆம்பிளைப் பிள்ளை பிறக்குது. இந்த வீட்டுக்கு நல்ல காலம் வருது. அந்தக்குறிப்பு இப்பத் தோன்றியிருக்குது. ஒரு மாதமாய் நீ வீட்டுக்கு விலகியிருக்கவில்லை" யென்றும் பிறவிருப்பவைகளையும் சொல்லி அவர்களை ஏமாற்றி விடுகிறார்கள். பெண்மக்கள் தாமாகவே தங்களுடைய குறைகளைச் சொல்லியும் பிச்சைக்காரரிடத்திற் குறிகேட்கின்றனர். அவர்கள் கண்டவற்றைக்கத்துகின்றனர். அதைக்கேட்டுச் சாதாரண ஜனங்கள் திருப்தியடைந்து, பிச்சைக்காரருடைய மூட வார்த்தையைத் தெய்வத்திருவாக்காகக்கருதி மகிழுகின்றனர்கள். இது ஒரு பெரு மூடத்தனமன்றோ! இம்மூடத்தனங்களை ஜனங்கள் நம்புவதற்குக்காரணம் கல்வியறிவின்மையே யாகும்.

## சுவாமியாட்டம்.

நமது நாட்டில் சுவாமியாடிகளுடைய ஆர்ப்பாட்டம் மிக அதிகம். சுவாமியாடிவாக்கொடுத்தலையே வயிற்றுப்பிழைப்பாகக்கொண்டிருப்போர் பலருளர். உயர்ந்தவர்கள் என எண்ணிக்கொண்டிருக்கும் வகுப்பைச் சேர்ந்த ஆடவர் பெண்டிரிற் கூடப்பலர் கௌரவமாகச் சுவாமியாடுகின்றனர். சுவாமியாடிகள் சிறு தெய்வங்களின் பிரதிநிதிகளாகப் பொதுஜனங்களை மருட்டும்கொடுமையை எழுதமுடியாது. துன்பம் வந்த காலத்திலும், ஒரு காரியம் நிறைவேற வேண்டிய காலத்திலும் ஜனங்கள் சுவாமியாடிகள் எனும் மருளாடிகளை அழைத்துக் கேள்விகேட்கிறார்கள். கௌரவச் சுவாமியாடிகள் எந்த இடத்திலும் தோன்றி அருள்மொழிபகருவர். சுவாமியாடுதலையே தொழிலாகக் கொண்டுள்ள பாமரர்கள், ஆபாச வேடம் பூண்டு கொண்டு அரிவாள் சாட்டை ஆகியவற்றைத் தாங்கிக்கொண்டு, சிறுதெய்வவெங்கோயிலின் முன்னர் நின்று வெறியாட்டாடுகின்றனர். "ஆடு கோழி யறுத்து ஆலயத்தில் பெரும்பூஜை போடப்பா? எல்லாக்குறையும் தீர்ந்துபோகும்" என்று கூவுகின்றனர். பயமே வடிவமாகவுள்ள பெண்மக்கள் மனம்மருண்டு சுவாமியாடியினிடம்போந்து பேயோட்டும்படி வேண்டுகின்றனர். சுவாமியாடி, தேவதை கோளாறு எனும் பிதற்றல்களை எடுத்துரைத்து, அவர்களைச் சாட்டையால் அடித்து உதைத்துப் பயந்தெளியுமாறு செய்கின்றான். எவ்வளவுகேட்டாலும் பாமரச்சுவாமியாடிகள் கொடுப்பதற்குப் பின்வாங்குவதில்லை.

கல்வியறிவின்மையினாலேயே பல ஜனங்கள் இம்மூடச் செயல்களை யெல்லாம் நம்புகின்றனர். உயர்ந்த வகுப்பார் என்போர் சுவாமியாடுதலும், சுவாமியாடிகளின் ஆர்ப்பாட்டத்தில் ஈடுபடுவதும், அசுத்த ஆராதனை செய்வதும் மிகவும் அநாகரிகமான செயலாகும். மனப் பைத்தியங்கொண்ட பெண்மக்கள் சுவாமியாடிகளுக்குச் செய்யும் மரியாதையும், அவர்கள் உரைகளைக்கேட்டுச் செய்யும் அடாத செயல்களும் அளவிட்டுரைக்கமுடியாது. மருளாடிகள் கோள்மூட்டிக் குடும்பங்களின் ஒற்றுமையைக் குலைத்துக் கலவரையை உண்டாக்கிவிடுகின்றனர். வயிற்றுப் பிழைப்பின் பொருட்டே பெரும் மருளாடிகள் மிக அதிகமான ஜனங்களைச் சிறு தெய்வ வெங்கோயில்களுக்கு அடிமைப்படுத்தி வைத்துக்கொண்டு, மூட பக்தியையும் குருட்டு நம்பிக்கையையும் வளர்த்து மக்களை எளிதில் ஏமாற்றிவருகின்றனர். ஜனங்கள் கூசாமல், தங்களைச் சிறு தெய்வ வெங்கோயிலுக்கு அடிமை என்று சொல்லிக்கொள்ளுவது வெட்கமேயாகும். சிறு தெய்வங்களின் கோர ரூபங்களையும் வக்கிரதந்தங்களையும், பாமரச் சுவாமியாடிகளின் ஆர்ப்பாட்டத்தினையும், கள்ளும் ஊனும் நிவேதித்தலையும், கொலை பாதகத்திற்கஞ்சாது உயிர்ப் பலியிடுதலையும் அறிவுடன் நோக்கும்பொழுது, அவ்வெங்கோயில்களில் அடியெடுத்துவைப்பது கூடப் பெருந்தீமையென்று திண்ணமாய்க் கூறலாம்.

அறிவுள்ளவர்கள் பயனற்ற சிறுதெய்வ வழிபாட்டை அடியோடு ஒழித்துவிடுதல் வேண்டும். இளைஞர்கள் சிறுதெய்வங்களைக் கனவிலும் கருதல் கூடாது. பெண்மக்கள் உயர்வு பெறுதல் வேண்டுமானால், சுவாமியாடுதலையும், மருளாடிகளிடம வரங்கேட்டலையும், பேய்ப் பைத்தியங்கொள்ளுதலையும், சிறுதெய்வ வழிபாடு செய்தலையும் அடியோடு விட்டுவிடவேண்டும். அறிவில்லாத பெண்மக்கள் பச்சிளங் குழந்தைகள் அஜீரணத்தாலும், பிற சிறு நோய்களாலும் வருந்துகின்றகாலத்துச் சுவாமி குறை யென்று அடாத செயல்கள் பல செய்கின்றனர். சிறு தெய்வங்களுக்கு அஞ்சேகால் பணம், ஆறேகால்பணம் முடிந்துபோட்டுக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். தீர்த்தக்காணிக்கை யென்று கள்வைத்துப் படைத்தற்குப் பணங்கொடுத்து மகிழ்கின்றனர். குட்டிச் சிறப்புச் செய்கிறோமென்று பசலை ஆட்டுக்குட்டிகளை வெட்டி வீழ்த்துகின்றனர். அந்தோ! கொடுமை! கொடுமை! சிலர் காணிக்கைப் பணங்களைச் சிறுதெய்வ வெங்கோயிலிலுள்ள கிணறுகளிற் கூடப் போடுகின்றனர். சிலர் சண்டைவந்துவிட்டால் சிறுதெய்வங்களை ஏவிவிடுகின்றோம் என்கின்றனர். மண்ணை வாரித்தூற்றுகின்றனர். அக்கோயிலில் பயபக்தியுடன் அடித்தழுவி முழுகின்றனர். பரிதாபம்! பரிதாபம்! சண்டைக்காரரிருவரும் தமக்குத் துன்பங்கள் நேரிடுகின்ற காலத்து, மந்திரவாதிகளைக் கூப்பிட்டுக் கழிப்புக் கழிக்கின்றனர். கழிப்புக் கழிக்கும் பொழுது பன்றிபலியிடப் பெறுகின்றது. சிறு தெய்வங்களுக்குப் பூஜையும் போடுகின்றனர். சிலர், இறந்தவர்கள் குட்டித் தெய்வமாகத் திரிந்து பெண்களையும் குழந்தைகளையும் பிடித்துத் துன்புறுத்துகின்றனர் என்று, அவர்களின் பொருட்டுச் சிறு தெய்வங்களுக்குக் காணிக்கை செலுத்தியும், குட்டிச்சிறப்புச் செய்தும் பூசனை செய்கின்றனர். சிலர், இறந்தவர்களாகிய குட்டித் தெய்வங்களின் பொருட்டு, கட்டுச் சோறு கட்டிப் பணியாரம் சுட்டுப் பால் பழம் கரைத்து வைத்துப் பொட்டல்களில் அவர்களுக்கு ஆராதனை செய்துவிட்டுத் திரும்பிப் பாராது செல்கின்றனர்.

## விநோத வழிபாடுகள்.

சிறு தெய்வங்களுக்கு நடைபெறும் வழிபாடுகளில் விநோதமானவை பல உண்டு. விழாக்காலங்களில் அவண்செல்லுவோர் அவ்வேடிக்கைகளை நன்கு கண்டு மகிழலாம். பெண்மக்களிற் சிலர் வயிற்றில் மாவிளக்கு வைத்துக்கொள்ளுகிறார்கள். சிலர் குளித்துவிட்டு ஈரச் சேலையுடன் கைகளில் வேப்பிலைக் கொத்தை வைத்துக்கொண்டு தெருப்புழுதியில் புரண்டு கும்பிடுகர்ணம் போடுகிறார்கள். ஆண்மக்கள் தமது பன்குர்குக் கையில் தேங்காயை வைத்துக்கொண்டு தெருவில் அங்கப்புரட்டம் புரளுகிறார்கள். பையன்கள் உடலில் கரும்புள்ளி செம்புள்ளி குத்திக்கொண்டு, வண்டிமாட்டு மணியைக் கழுத்தில் போட்டுக்கொண்டு, கையில் வேப்பிலைக் கொத்தைத் தாங்கிக்கொண்டு, கோயிலைச் சுற்றிக் கூச்சலிட்டுக்கொண்டு வலம் வருகின்றனர். பெரிய பெண்மக்கள் பிரார்த்தனை யென்று தலையை மொட்டையடித்துக் கொண்டு, சந்தனத்தைத் தடவிக்கொள்ளுகிறார்கள்.

வீடுகளில் பாம்பு தேள் முதலியன வாராமலிருக்க, மண்ணாலும் வெள்ளியாலும் அவைகளைச் செய்து கொண்டுவந்து கோயிலில் வைக்கின்றனர். பிள்ளைப் பேற்றை விரும்புவோர் மதலை எடுத்து விடுகிறோம் என்று மண்ணாலும் வெள்ளியாலும் தங்கத்தாலும் பொம்மைகளைச் செய்து கொண்டு வந்து வைக்கின்றனர். பெரும் மண் பொம்மைகளைச் சில பெண்மக்கள் தலையில் தூக்கிக் கொண்டும் இடுப்பில் எடுக்கிக் கொண்டும் வருகின்றனர். சிலர் மரக்கட்டில்களில் பொம்மைகளை வைத்தும் மரக்கிளைகளிலும், கோயில் கொட்டகையிலும் தொங்க விடுகின்றனர். சில பக்தர்கள் நாக்கிலும் கைகளிலும் வேலாயுதங்களைக் குத்திக்கொண்டு மஞ்சள் துணிகளை யணிந்து கொண்டு வரிசை வரிசையாக வருகின்றனர். சிலர் அக்கினிச் சட்டிகளைத் தாங்கி வருகின்றனர். சில வீர பக்தர்கள் ஆயிரக்கணக்கான வேல்களை, உடல்களில் குத்திக்கொண்டு தோளில் காவடிகளைத் தூக்கிக்கொண்டு, ஒரு சிறு தேரை இழுத்துவருங் காட்சி வேடிக்கையாக இருக்கும். கீழே அக்கினித் தணலைப் பரப்பி, மேலே கீற்றுக் கொட்டகையில் நெருப்பைவைத்து விட்டு, ஆனந்தமாய் அதில் காவடிக்காரர் விளையாடுகின்றனர். தீமிதி உற்சவத்தில் நூற்றுக்கணக்கான பெண்களும் குழந்தைகளும் தணலில் நடக்கின்றனர். பெண்மக்களிற் கூடச் சிலர் காவடி எடுத்தாடுகின்றனர். இவைகளுக்கெல்லாம் காரணம் மூடபக்தியே யன்றோ?

திட்டி சுற்றுகிறோம் என்று நடுத் தெருவில் எருவில் பருத்திக் கொட்டையையும் மிளகாயையும் வைத்து நெருப்பிட்டுப் புகைக்கின்றனர். எடுத்து எழுத முடியாதபடி சிறு தெய்வப் பைத்திய சம்பந்தமான உலக மூடங்கள் ஆயிரக் கணக்காக நாட்டில் நிறைந்துள்ளன. அவை மக்கள் அறிவைக் கெடுத்து மனத்தைப் புண்படுத்துவதோடு வாழ்வையும் சின்னபின்னப் படுத்துகின்றன. அநாகரிகமான மூடபக்தர்களுடைய அறிவுக் கண்ணைத் திறக்கக் கூடாது என்று பிடிவாதஞ் செய்யும் அன்பர்கள் இம் மூடச் செயல்களை நினைத்து நம் மக்கள் நிலையை உணருவார்களாக! ஆராய்ச்சியறிவு தலைகாட்டக் கூடாது என்று தடுக்கும் அன்பர்கள் இவ்வுயரிய வழக்கங்களை உணர்ந்தாயினும், ஆராய்ச்சியை வளர்ப்பார்களாக!

வாகீச பக்தன்.

—



# தோத்திரப் பாடசாலைகள்.

நமது தமிழ் நாட்டில், தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருப்புகழ், திருவருட்பா ஆகிய இசைத்தேன் ததும்பும் தமிழ்த்தோத்திரப் பாக்களை மாணுக்கர்களுக்கும் பயிற்றுவிக்கும் பொருட்டுப் பலபாடசாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவை மேற் கூறிய பக்திப்பனுவல்களைப் பரப்புதற்பொருட்டு ஏற்பட வேண்டுவனவேயாம். ஆனால் இந்நாளில் இவை நடைபெறும் முறையை நோக்கும் பொழுது, அதிகமான பலனை எதிர்பார்க்க முடியவில்லை. வேத பாடசாலைகளைப்போலவே இவைகளும் பெரும்பயன் தரத்தக்காத நிலையில் நடைபெறுகின்றன. இவைகளிலும் சாதிவேறுபாடு பெரிதும் போற்றப் பெறுகின்றது. வேதபாடசாலைகளில் பிராமணரே பயிலுதற்குரியராகக் கருதப்படுதல்போல், தேவாரபாடசாலைகளில்சைவவேளாளரே பயிலுதற்குரியவர்களாகக்கருதப்படுகின்றனர். திருவாய்மொழிப்பாடசாலையில் வைணவப் பிராமணர்மட்டும் பயிலுதற்கருகராகக் கருதப்படுகின்றனர். திருவாசகம், திருப்புகழ், திருவருட்பா ஆகியவற்றைப்பயிற்றுவிக்கும் பாடசாலைகளில் சாதிவேறுபாட்டைப் பாராட்டுவனவும் உண்டு; பாராட்டாது எல்லோரையும் சேர்த்துக்கொண்டு தாராள சிந்தையுடன் தோத்திரங்களைப் பயிற்றுவிப்பனவும் உண்டு. இப்பொழுது தேவாரம், திருவாய்மொழி ஆகியபாடசாலைகளிலும் ஒரு சில சாதி வேறுபாட்டை ஒழித்துப் பொது நோக்குடன் நடைபெறுகின்றன. ஆனால் பொதுவாக நோக்கும் பொழுது, தமிழ்த்தோத்திரபாடசாலைகளில் பெரும்பான்மையானவை சாதி வேறுபாடு கருதுவனவே. வடமொழி வேதமும், தமிழ் வேதமும் யாவரும் படித்தற்குரியன என்பதை ஒருவரும் மறுக்கமுடியாது. ஒருசாதியாரின்பொருட்டு அவை தோற்றுவிக்கப்பட்டனவல்ல. பொதுஜனங்களின் நன்மையின் பொருட்டே அவைகளை ஆன்றோர்கள் வெளியிட்டிருக்கின்றனர். அப்பெரியார் நோக்கத்திற்குமாறாக, வைதிகர்கள் அவைகளை எல்லோரும் அறியாதபடி மறைத்து வைத்துக்கொள்ளுவதும், சில பாடசாலைகளில் உயர்ந்தார் எனப்படும் பிராமணர், சைவர் ஆகியவர்களுக்குமட்டும்போதிப்பதும் சிறப்புடையதாகாது. இப்பாடசாலைகளை ஏற்படுத்தும் கனவான்களிற் பலர், பிராமணர், சைவ வேளாளர், ஆகிய வகுப்புக்களல்லாத பிறவகுப்பினராகவேயிருக்கின்றனர். பக்திப் பெருக்கினாலேயே அவர்கள் இவைகளை ஏற்படுத்துகின்றனர். அன்னோர் பிள்ளைகள்கூட இப்பாடசாலைகளிற் சேர்ந்து பயிலுதற்கு அருகராகார் என்பது விந்தையே. பக்திப்பனுவல்களைப் பயிற்றுவிக்கும் கலாசாலைகளில் சாதி வேறுபாடு கருதுவது எற்றுக்கு? அப்பனுவல்களைப் பாடிய பெரியாரிற் பலர், சாதிப்பகைமையை ஒழிப்பதற்குத் தோன்றியவரன்றோ? அற்றவைப் பிள்ளைகளுக்குப்புகட்டும் நிலயங்களில் சாதி வேறுபாட்டினைப் பாராட்டுவது மிகக் குறுகிய நோக்கம் என்பதை வைதிகர்கள் உணருவார்களாக! இத்தகைய தோத்திரப் பாடசாலைகளை ஏற்படுத்தி நடாத்துவோர் தாராள சிந்தையுடன் எல்லாச் சாதிப்பிள்ளைகளையும் சேர்த்துக் கொள்ளுவார்களாக. அறிவும் அன்பும் அனைவருக்கு முரியனவாதலால், அவைகளை மக்களனைவருக்கும் தாராள சிந்தையுடன் வேறுபாடு கருதாது வழங்குதலே தகுதியுடைய செயலாகும். தனவைசியர்கள் தமிழ் நாட்டில் தோத்திரப் பாடசாலைகள் பலவற்றைப் பக்திப்பெருக்கால் ஏற்படுத்தியிருக்கின்றனர். அன்னோரும், தங்கள் பிள்ளைகளும் பிற பிள்ளைகளும் அவைகளிற் பயிலுதற்கு வேண்டிய வசதிகளைச் செய்வார்களாக! பிராமணர், சைவ வேளாளர்மட்டுமே அப்பாடசாலைகளிற் பயிலுதற்குரியவர்கள் எனும் குறுகிய நோக்கத்தைச் சீக்கிரத்தில் அன்பர்கள் ஒழித்து, எல்லோரும் படித்தற்குரியவர் எனும் பெரு நோக்கத்தை நிலைபெறச் செய்வார்களாக!

தமிழ்த்தோத்திரப் பாடசாலைகளில் செய்யவேண்டிய சீர்திருத்தங்கள் மற்றுஞ் சில உள்ளன. இப்பொழுது இப்பாடசாலைகளிற் பயிலும் மாணவர்களுக்கு இலக்கண இலக்கியப்பயிற்சியின்மையால், அவர்களுக்குப் பிழையறப் பொருளுணர்ந்து ஓதத் தெரியவில்லை. பொருளுணராது பிழைகள் மலியக் கிளிப்பிள்ளைகள் போலும், கிராமபூன் போலுமே, மாணவரும் ஆசிரியரிற் பலரும் ஓதுகின்றனர். பொருளுணராது பிழைபடப் பாடுவதாற் பயனில்லை. தமிழ்த் தோத்திரங்களும், ஏறக்குறைய வடமொழி வேதங்களைப் போல், ஒடுக்கப்பட்டனவாகப், பொருளுணரப் படாதனவாக, ஒரு சாதியார்க்குரியனவாக, வைதிகர் பிழைப்பிற்குரியன வாக வந்துவிட்டன. நன்னோக்கத்துடன் எழும் இயக்கங்கள் எல்லாம் இவ்வாறே குறுகிய நோக்கமுடையவர்களால்கெட்டநிலையை யடைந்துவிடுகின்றன. உணர்வுடன்பாடுதற்கு இலக்கண இலக்கியப் பயிற்சி மிகவும் இன்றியமையாததாகும். மாணுக்கர்களுக்குப்பொது அறிவும் அவசியம் போதிக்கப்பெறல் வேண்டும். கணக்கு, தொழில் ஆகியவைகளும் கற்பிக்கப் பெறல் வேண்டும். இப்பாடசாலைகளும் தற்காலக் கலாசாலை முறையிலேயே நடைபெறல் வேண்டும். இவை இசைத் தமிழினை வளர்க்கும் சிறப்பான கலாசாலைகளாதலால், இசைப்பாடம் சிறப்பானதாகவும், இலக்கியம், இலக்கணம், பொது அறிவு, கணக்கு, தொழில் ஆகியவை பொதுவானவைகளாகவும் கருதப்பெறல் வேண்டும். இப்பொழுது பல பாடசாலைகள் சோற்றுச்சாலைகளாகவே நடைபெறுகின்றன. சோற்றுச்சாலை யமைப்பை மாற்றிக் கலாசாலையாக்குதலே சிறப்புடையதாகும். எல்லாப் பாடங்களும் கற்பிக்கப்பெற்றால் மாணவர்கள் வீட்டிலேயே உணவு உட்கொண்டு விட்டுப் பாடசாலைக்கு வந்து பயிலுவார்கள். இசைப்பாடம் ஒன்று மட்டும் கற்பிக்கப் பெறுதலால், சாப்பாடு போட்டாற்றான் பிள்ளைகள் படிக்க வருகின்றனர். எனவே, கலாசாலை முறையில் தோத்திரப் பாடசாலைகளை நடத்துதலே மேன்மையுடையதாகும்.

அரு. சோம.

—

## மோட்டார் விநோதம்.

மோட்டார் ஓட்டி—என்ன முட்டாள்தனம்? பிரயாணிகளைப் பார்த்து, ஏற்றினலொழிய, எவ்வாறு நாம் வயிறு பிழைப்பது? காலிவண்டியை ஓட்டுவதா?

கண்டக்டா:—பின்னே பார்ப்பதற்கு எனக்குக் கண்கள் இல்லை. நான் முக்கண்படைத்த சிவன் அல்ல.

பிரயாணி:—சண்டையிட வேண்டாம். வண்டியை ஓட்டுங்கள். எனக்கு அவசரம்.

மோட்டார் ஓட்டி:—எல்லாருக்கும் அவசரம்தான். ஆனல் உங்கள் வயிற்றுக்கு நீங்கள் அவசரப்படுகிறீர்கள். எங்கள் வயிற்றுக்குச் சிறிது தாமதமாகப் போகவேண்டும். அவ்வளவுதான்!

# துர்க்கை தரிசனம்.

(ஆசார்ய டி. எல். வாஸ்வானி எழுதிய . .)

எத்தகைய கடவுளை வணங்குவது? பலகாலத்திய மனிதர்களால் இக் கேள்வி கேட்கப்பட்டு, விடையும் இறுக்கப்பட்டுள்ளது. ஆரியர்களல்லாதவர்களுடைய வேதங்களில் கடவுள் நீதிவழங்கும் உயர்தர நீதிபதியாகச் சிலசமயம் கூறப்பட்டிருக்கிறது; விசுவாசமுள்ளவர்களை யுத்தத்திற்கு இட்டுச்சென்று, அவர்களுக்கு வெற்றியுண்டாக்கும் போரசாராகச் சிலசமயம் குறிக்கப்பட்டிருக்கிறது. செமிதியர்களுடைய உணர்ச்சியே உயர்ந்த நிலையை அடைந்ததாக எனக்குத்தோன்றுகிறது; அவர்கள் கடவுள் எல்லாருக்கும் தந்தை என்று கூறுகிறார்கள்.

செமிதியர்களுடையஉயர்ந்த சொல் 'தந்தை' என்றால், ஹிந்துக்களின் உயர்ந்தசொல் 'தாய்' ஆகும். இந்துவுக்குத் தாய்த்தன்மை தெய்வீகம் பொருந்தியது; ஒருஇந்துமனிவியின் உயர்ந்த ஆசை தாய் ஆக வேண்டும் என்பதே. ஒருஇந்துவுக்கு மற்ற எந்த மனிதப்பெயரையும்விட, 'தாய்' என்ற பெயரே ஆசிபெற்றது, மனிதர் புகழுரைகளுக்குஅப்பாற்பட்ட ஆசிபெற்றது. 'அம்மா' என்றஒரு சொல்லைச்சுற்றி எண்ணற்ற இன்ப துன்பங்கள் ஒட்டிக்கொள்கின்றன. துக்கத்திலும் துன்பத்திலும் இந்து 'அம்மா' என்ற வார்த்தையை உரைக்கிறான்; சாவின் நிழல் தன்னைச்சூழ்ந்து கொள்ளும் பொழுது, அவன், பூர்வீக நதியாகிய 'கங்காதேவி' யின் கரைகளுக்குத்தன்னை எடுத்துச்செல்ல வேண்டுமென்று விரும்புகிறான். இறந்தபின்னரும்கூட 'நதிதேவி' யின் நீரில் தனது சாம்பல் கலந்துவிட வேண்டுமென்று அவன் விரும்புகிறான். இருபது ஆண்டுகளுக்கு முன்னர் வங்காளம் தனது பெருத்த போராட்டத்தின்பொழுது 'வந்தேமாதரம்' என்று கோஷம் செய்தது; அந்த கோஷத்திலிருந்து இந்தியாவின் கோடிக்கணக்கான ஜனங்களுக்குத் 'தாய்' என்றசொற் கருத்தின் சக்தியில் அவர்கள் உணராத ஒரு நம்பிக்கை எழுந்தது. இல்வாழ்வின் புனிதமும், பிற்காலவாழ்வின் தெய்வ பக்தியும், தேசபக்தி உணர்ச்சியும் ஆகிய எல்லாம் 'தாய்' என்றசொல்லின்கருத்தால் வளர்க்கப்படுகின்றன.

கடவுள் நமது தாய்; துர்க்கபூஜையின் உட்கருத்தில் இது ஒரு பாகம். கடவுளைப் பிரபஞ்சத்தின் 'அன்னை இதயம்' போலக் கருத இந்து பக்தன் விருப்பம் கொள்ளுகிறான்.

துர்க்கை என்பது பொருள்கொண்ட ஒரு அடையாளம் என்று நான் கருதுகிறேன். மனிதர்களது புராணம் இயற்றும் சக்தியில் உண்டான ஒரு அடையாளமல்ல அது. தடைக்குட்படுத்தும் ஒரு அடையாளமல்ல அது. தெய்வதம் பொருந்திய தாய்த்தன்மையின்மர்மத்தை ஒளிர்வதான ஓர் அடையாளமே அது.

அன்னை துர்க்கை சக்தி—ஓர் உயிருடைய சக்தி—ஆவள். நவீன இந்தியாவைச் சேர்ந்தவர்களாகிய நாம் சுதந்திரம் அடைய விரும்பினல், தேசத்தின் 'தாய்ச்சக்தி' யை நாம் வளர்க்கவேண்டும். பெண்களின் முன்னேற்ற இலட்சியம் நமது தேசிய இயக்கத்தை வளர்க்கவேண்டும். சமுதாயம் பெண்களுக்கு விலங்குகள் இட்டுவரும் வரையில் ஒரு தேசம் விடுதலைக்குத் தயார் ஆகாது. துர்க்கையின் காலடியில், தேசத்தின் செல்வமாகிய திருமகள் இருக்கிறாள். தேவர்களே அவளை வணங்குகின்றனர். பிரம்மாவும், விஷ்ணுவும், சிவனும் அவளது பக்தர்கள். அவள் சக்தியின் குறியாயிருக்கிறாள். தெய்வத்தன்மை மெதுத் தன்மையல்ல, தெய்வத்தன்மை வலிமை ஆகும். "மென்மைகொண்டவர்களாயிராதீர்கள்! வலிமை கொண்டவர்களாயிருங்கள்" என்பதே தற்கால இந்தியாவுக்குத் தாய் துர்க்கையின் செய்தியாகும். அவளது ஒரு கையில் தாமரை மலர் இருக்கிறது என்றால், மற்றோர் கையில் வாளும் இருக்கிறது. அவள் மரண நடனம் ஆடுகின்றாள். அவள் வாளால் வீசுகின்றாள். அவள் வெட்டுகின்றாள். பயங்கரமான தரிசனம் இது—என்கிறீர்கள் நீங்கள். என்றாலும் அது தாயின் தரிசனம்! "நமது கடவுள் நாசம் செய்யும் தீ" என்று ஸெயின்ட் பால் சொல்லவில்லையா? துர்க்கபூஜைக் கிரியைகளில், தீயின் முன் தோத்திரங்கள் செய்தலும் ஒன்று. அக்கிரியை எவ்வளவு அழகும், பொருளும் கொண்டது! துர்க்கை கம்பீரமான சிங்கம் அல்லது புலியின் மீதமர்ந்து அசுரர்களுக்கு எதிராக யுத்தக்கருவியைச்சுழற்றுகின்றாளென்றால், அது அன்பின் வலிமையைக் காட்டுவதற்காக அல்லவா? அன்பு வலிமை கொண்டது என்பதையும், அது வதையும் புரியும் என்பதையும் மனிதர் மறந்து விடுகின்றனர். தாய் சந்ததியிடம் அன்பு கொள்கிறாள்; அதனாலேயே, கொடுமையை வதம் செய்யவும், தீமையைத் தொலைக்கவும், பாவச் சக்திகளை அழிக்கவும் அவள் தர்மம் என்ற தனது வாளுடன் விரைகின்றாள்.

எனது இந்து நண்பர்களே! நீங்கள் வெகுகாலமாக மென்மையை வணங்கி வருகின்றீர்கள். துர்க்கையை வணங்கவேண்டுமானால், நீங்கள் சக்தியை வணங்கக் கற்றுக்கொள்ளுங்கள். புனிதம் செய்யும் தீயின் கிரியைகளைத்தாய்க்கு அர்ப்பணம் செய்யுங்கள். கீழ் நாட்டின் சாதல் இல்லா இருஷிகளின் பிள்ளைகளே! பெண்களே! தீச்சுவாலையை வணங்குவோராக இருங்கள்! உங்கள் இதயங்களில் அன்புகொண்டு வன்மைக்குரிய சுதந்திரத்தை வீரத்துடன் அமையுங்கள்!

—

# நாராயண ஹேமச்சந்திரர்.

மகாத்மா காந்தி "இளமை இந்தியா"வில் எழுதியது.

(காந்தி அடிகள் எழுதிவரும் தற்சரிதத்தில் பின்வரும் அத்தியாயம் முதல் பகுதியில் உ௯-வது அத்தியாயமாக இணைக்கப்படவேண்டும் என்று மகாத்மா கூறுகின்றார். ப—ர், ஊழியன்.)

இந்த சமயத்தில் (இங்கிலாந்துக்கு காந்தி சென்று இரண்டு ஆண்டுகளிருக்கும்) நாராயண ஹேம சந்திரர் ஆங்கில நாட்டுக்கு வந்தார். நூலாசிரியரென்று அவரைப்பற்றி நான் கேள்விப்பட்டிருந்தேன். தேசிய இந்தியச் சங்கத்தைச் சார்ந்த மானிங் மாது அவர்களின் வீட்டில் நாங்கள் சந்தித்தோம். நான் கூட்டத்தில் நன்ருகப் பழக முடியாது என்று மானிங் மாதுக்குத் தெரியும். நான் அவர்கள் வீட்டுக்குப் போகும்பொழுதெல்லாம், என்னிடம் பிறர் பேசினலொழிய நாவடைத்துப்போய், உட்கார்ந்துகொண்டு இருப்பது வழக்கம். மானிங் அவர்கள் என்னை நாராயண ஹேமசந்திரருக்கு அறிமுகம் செய்துவைத்தார்கள். அவருக்கு ஆங்கிலம் தெரியாது. அவருடைய உடை விநோதமானது—அவலட்சணமான கால் சட்டைகள், அழுக்குப் படிந்த, மஞ்சள் வர்ணமான, சுருக்கம் கொண்ட சட்டை; சட்டை பிரஞ்சு முறையைத் தழுவியது. கழுத்துப்பட்டையாவது காலராவது கிடையாது. கம்பளிக்குல்லாய் ஒன்று அணிந்திருந்தார். அவருடைய தாடி மிகவும் நீளமாயிருந்தது. அவருடைய உடல் மெல்லியதாகும். அவர் குட்டையர். அவருடைய வட்ட முகத்தில் அம்மை வடுக்கள் நிறைந்திருந்தன. அவருடைய நாசி கூர்மையாகவும் இல்லை, மழுங்கியுமில்லை. அவருடைய கையைக்கொண்டு, அடிக்கடி, அவர் தாடியைத் திருப்பிக்கொண்டிருந்தார்.

நாகரிகம் கொண்ட சமூகத்தில் இத்தகைய விநோதத் தோற்றமும் உடையும் கொண்ட மனிதனைத் தனியே பிரித்துவிடலாம்.

"தங்களைப்பற்றி நான் வெகுவாகக் கேட்டிருக்கிறேன். தங்களுடைய நூல்களில் சிலவற்றையும் நான் படித்திருக்கிறேன். என்னுடைய இடத்துக்குத் தயை செய்து நீங்கள் வருவீர்களானல், நான் மிகுதியும் மகிழ்வடைவேன்" என்றேன்.

நாராயண ஹேமசந்திரருக்குச் சற்று கம்மலான தொண்டை. "நல்லது; நீங்கள் எங்கே வசிக்கின்றீர்கள்" என்று, முகத்தில் புன்னகையுடன், என்னைக் கேட்டார். "ஸ்டோர் தெருவில்" என்றேன். "அப்படியானல், நாமிருவரும் அக்கம்பக்கத்தவர்கள். எனக்கு ஆங்கிலம் கற்றுக்கொள்ள ஆசை. நீங்கள் கற்றுக்கொடுப்பீர்களா" என்ருர். "என்னல் கூடிய எதையும் உங்களுக்குச் சொல்லிக்கொடுப்பதில் எனக்கு மகிழ்ச்சி. உங்களுக்கு விருப்பமானல் நான் உங்களிடத்திற்கு வருவேன்" என்றேன். "வேண்டாம்; நான் உங்களிடம் வருகின்றேன். வரும்பொழுது மொழிபெயர்ப்புப் புஸ்தகம் ஒன்று கொண்டுவருகிறேன்" என்ருர். எனவே, நாங்களிருவரும் "ஒப்பந்தம்" பேசிக்கொண்டோம். விரைவில் நாங்களிருவரும் நெருங்கிய நண்பர்களானேம்.

நாராயண ஹேம சந்திரருக்கு இலக்கணம் தெரியாது. அவர் 'குதிரை'யை வினைச்சொல்லாகவும், 'ஓடு' என்பதைப் பெயர்ச்சொல்லாகவும் கொண்டார். இத்தகைய விநோதமான உதாரணங்களில் பல என் நினைவிலிருக்கின்றன. ஆனல் அவருடைய அறியாமையினல், அவர் திகைத்துப் போகவில்லை. என்னுடைய சிறிய இலக்கண அறிவைக்கண்டு, அவர் அஞ்சவுமில்லை. இலக்கணம் அறியாமை வெட்கப்படுவதற்குரிய சங்கதி என்று நிச்சயமாக அவர் எண்ணினதே இல்லை.

பூரணக் கவலையின்மையோடு, அவர் கூறினதாவது:—"உங்களைப்போல, நான் பள்ளிக்குச் சென்றவனல்ல. என்னுடைய கருத்துக்களை வெளியிடுவதற்கு இலக்கணத்தின் தேவையை ஒரு பொழுதும் நான் உணர்ந்ததில்லை. நல்லது; உங்களுக்கு வங்காளி பாஷை தெரியுமா? எனக்குத் தெரியும். வங்காளத்தில் நான் சுற்றுப்பிரயாணம் செய்திருக்கிறேன். மகரிஷி தேவேந்திரநாத தாகூர் அவர்களின் நூல்களை குஜராத்தி பேசுகிறவர்களுக்கு மொழி பெயர்த்துத்தந்தது நான். வேறுபாஷைகளில் இருக்கும் பொருள் குவியல்களை குஜராத்தியில் மொழிபெயர்க்க நான் விரும்புகின்றேன். மொழிக்கு மொழி நான் பெயர்த்துப் போடுவதில்லை என்பது உங்களுக்குத் தெரியும். எழுத்தின் உட்கருத்தைமட்டும் வெளிக் கொணர்வது போதுமானது. என்னைக் காட்டிலும் அறிவில் மிகுந்தவர்கள் எதிர்காலத்தில அதிக வேலை செய்யலாம். ஆனல் இலக்கணத்தின் உதவியில்லாமல் நான் இப்பொழுது செய்வது போதுமானது. எனக்கு மராத்தி, ஹிந்தி, வங்காளி தெரியும். இப்பொழுது ஆங்கிலம் கற்றுக்கொள்ளத் துவக்கியிருக்கிறேன். நான் விரும்புவது ஏராளமான சொற்கள். என்னுடைய ஆசை இதோடு முடிவுபெற்றுவிட்டது என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? இல்லை; நான் பிரான்சு நாட்டுக்குப்போய் பிரஞ்சு பாஷை கற்றுக்கொள்ளப் போகிறேன். அந்த பாஷையின் இலக்கியம் மிகுதியானது என்று நான் கேள்விப்படுகிறேன். கூடுமானல் ஜர்மனிக்கும்போய், ஜர்மன் பாஷையையும் கற்றுக்கொள்வேன்." இவ்வாறு அவர் சோர்வில்லாமல் பேசுவார். மொழிகளைக் கற்பதற்கும், அந்நிய நாடுகளில் பிரயாணம் செய்வதற்கும் அவருக்கு அளவற்ற ஆசை.

"அப்படியானல், நீங்கள் அமெரிக்காவுக்கும் செல்லுவீர்கள்?"

"நிச்சயமாகப் போவேன். புதிய உலகத்தைப்பார்க்காமல் இந்தியாவிற்கு எவ்வாறு நான் திரும்புவேன்?"

"அதற்கு உங்களிடம் பணமேது?"

"எனக்கு எதற்காகப் பணம்? உங்களைப் போல நான் நாகரிகம் உள்ளவனல்ல. குறைந்த உணவும், குறைந்த உடையும் எனக்குப்போதும். அதற்காக, எனது நூல்களிலிருந்தும் எனது நண்பர்களிடமிருந்தும் எனக்குக் கிடைக்கும் சிறுதொகை போதும். எப்பொழுதும் நான் மூன்ருவது வகுப்பிலேதான் பிரயாணம் செய்கிறேன். அமெரிக்காவுக்குப் போகையில்கூட, நான் கப்பலின் அடித்தட்டிலேதான் பிரயாணம் செய்வேன்" என்ருர்.

நாராயணஹேமசந்திரரின் எளிய தன்மை மெச்சத்தக்கதே. அவருடைய கபடமின்மை இன்னும் போற்றத்தக்கதாகும். கர்வம் அவரிடம் சிறிதுமில்லை. ஆனல் தாம் நல்ல நூலாசிரியர் என்ற எண்ணம் மட்டும் அவரிடம் மிதமிஞ்சியிருந்தது.

தினந்தோறும நாங்கள் சந்தித்தோம். எங்களிருவருடைய கருத்துகளுக்கும் செயல்களுக்கும்மிகுதியான ஒற்றுமை இருந்தது. நாங்கள் இருவரும் சைவ உணவு கொள்பவர்கள். பலதடவைகளில், நாங்கள் சேர்ந்து உண்டிருக்கிறோம். வாரம் ஒன்றுக்கு கஎ ஷில்லிங்கைக்கொண்டுவாழ்ந்து, நானே சமைத்தகாலம், சில சமயங்களில், நான் அவருடைய அறைக்குப்போவேன்; மற்றும் சில சில சமயங்களில் அவர் என்னிடம் வருவார். நான் ஆங்கில முறையில் சமைத்தேன். இந்திய முறைச்சமையலைத்தவிர, வேறு எதுவும் அவருக்குப் பிடிக்காது. பருப்பு இல்லாமல் அவரால் இருக்க முடியாது. காரட்டுக்கிழங்குக் குழம்பு நான் வைப்பேன். என்னுடைய சுவையைக் கண்டு அவர் வருந்துவார். ஒரு சமயம் 'மங்' என்ற இந்தியப்பருப்பு அவருக்கு எப்படியோகிடைத்து விட்டது. அதைச் சமைத்து, என்னிடத்துக்குக் கொண்டுவந்துவிட்டார். அதை நான் மகிழ்ச்சியுடன் உண்டேன். இதனல் ஒழுங்காகச் சமையலை யாற்றிக்கொள்ளும் நிலைக்குவந்துவிட்டோம். நான் செய்யும் தின்பண்டங்களை அவரிடம் கொண்டு போவேன். அவர் செய்வதை என்னிடம் கொண்டுவருவார்.

அந்த சமயத்தில் பெரிய பாதிரியார் மானிங் அவர்களைப்பற்றி, ஒவ்வொருவரும் பேசிக்கொண்டார்கள். துறைமுகத்தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்திருந்தார்கள். திரு ஜான் பர்ன்ஸ், பெரிய பாதிரி மானிங் அவர்களின் நன்முயற்சியால் வேலை நிறுத்தம் விரைவில் முடிந்தது. ஆங்கில முதல் மந்திரி டிஸ்ரேலி அவர்கள் பெரிய பாதிரியாரின் எளிய வாழ்க்கையைப் புகழ்ந்து பேசியதை, நான் நாராயணஹேமசந்திரருக்குச்சொன்னேன். "அப்படியானல் அந்த ஞானியை, நான்பார்க்க வேண்டும்" என்ருர் அவர்.

"அவர் பெரிய மனிதராயிற்றே? அவரைச் சந்திக்க, தங்களால் எவ்வாறு முடியும்?"

"எப்படியா? எனக்குத் தெரியும். என்னுடைய பேரால், அவருக்கு நீங்கள் ஒரு கடிதம் எழுதுங்கள். நான் நூலாசிரியரென்றும், அவருடைய ஜீவகாருண்ய வேலைக்காக, அவரை நான் வாழ்த்துகிறேன் என்றும், எனக்கு ஆங்கிலம் தெரியாததனல் நீங்கள் எனக்கு மொழிபெயர்ப்பாளராக என்னுடன் கூட வருவீர்களென்றும் எழுதுங்கள்."

அந்த முறையில், நான் ஒரு கடிதம் எழுதினேன். இரண்டு மூன்று நாட்களில், தம்மைச் சந்திக்குமாறு, நேரத்தைக் குறிப்பிட்டு, பெரிய பாதிரி மானிங் அவர்கள் பதில் எழுதினர். எனவே, நாங்களிருவரும் பாதிரியாரைச் சந்திக்கச் சென்ருேம். வழக்கப்படி நான் உடைதரித்துக்கொண்டேன். தமது வழக்கமாயுள்ள உடையோடு, நாராயண ஹேமசந்திரர் வந்தார். இதைக் கேலி செய்யமுயன்றேன். ஆனல், என்னைப்பார்த்து, கடகடவென்று சிரித்துவிட்டு, "நாகரிகமுள்ள நீங்கள் யாவரும் கோழைகள். பெரிய மனிதர்கள் ஒருவனுடைய தோற்றத்தை ஒரு பொழுதும் கவனிப்பதில்லை. அவர்கள் அவனுடைய உள்ளத்தைப்பற்றி நினைப்பார்கள்" என்ருர்.

பாதிரியாரின் மாளிகையில் நுழைந்தோம். நாங்கள் உட்கார்ந்து கொண்டவுடன், மெல்லிய, உயர்ந்த முதியவரொருவர் தோன்றினர். அவர் எங்களைக் கைகுலுக்கினர். நாராயண ஹேமசந்திரர் பின்வருமாறு வாழ்த்துக்கூறினர்:—"உங்களுடைய காலத்தை வீணுக்க,நான் விரும்பவில்லை. தங்களைப்பற்றி எவ்வளவோ நான் கேள்விப்பட்டிருக்கிறேன். வேலை நிறுத்தம் செய்தவர்களுக்காக, தாங்கள் செய்த நல்ல வேலையின் பொருட்டு, தங்களிடம் வந்து, தங்களுக்கு வந்தனம் அளிக்கவேண்டும் என்ற உணர்ச்சி என்னிடம் பிறந்தது. உலக ஞானிகளைக் காணுவது எனது வழக்கம். அதன் பொருட்டே, நான் உங்களுக்குத் தொந்திரை கொடுத்தேன்."

அவர் குஜராத்தியில் பேசியதற்கு, இது எனது மொழி பெயர்ப்பாகும்.

"நீங்கள் வந்ததில் எனக்கு மகிழ்ச்சி. உங்களுடைய லண்டன் வாசம் உங்களுக்கு இனிப்பாயிருக்கு மென்றும், நீங்கள் இந்நாட்டு மக்களுடன் நெருங்கிப் பழகுவீர்களென்றும், நான் எதிர்பார்க்கிறேன். கடவுள் உங்களை ஆசீர்வதிப்பாராக!"

இவ்வாறு கூறியதும், பாதிரியார் எழுந்து நின்று, எங்களுக்கு விடைகொடுத்தனுப்பினர்.

ஒரு சமயம் நாராயண ஹேமசந்திரர் ஒரு துணியையும் சட்டையையும் மட்டும் அணிந்துகொண்டு, என்னிடத்துக்கு வந்தார். வீட்டுக்காரி கதவைத் திறந்து, பயத்துடன் என்னிடம் ஓடிவந்து, (இந்த வீட்டுக்காரி புதியவள்; அவளுக்கு நாராயண ஹேம சந்திரரைத் தெரியாது) "ஒரு பைத்தியக்காரன் உங்களைப்பார்க்க விரும்புகின்ருன்" என்ருள். நான் கதவண்டை சென்றேன். வியப்புடன், ஹேம சந்திரரைக் கண்டேன். நான் திகைத்துப்போனேன். ஆனல், அவருடைய முகத்தில் வழக்கமாயுள்ள புன்னகையொன்றே காணப்பெற்றது.

"தெருக்குழந்தைகள் உங்களைப் பிடித்திழுக்கவில்லையா" என்றேன். "சரி; அவைகள் என்னைத் தொடர்ந்து ஓடிவந்தன. ஆனல், நான் ஒன்றும் கவனிக்கவில்லை. அவைகள் சும்மா இருந்து விட்டன" என்ருர்.

சில மாதங்கள் லண்டனில் வாசம் செய்த பின்னர், நாராயண ஹேமசந்திரர் பாரிஸுக்குச் சென்ருர். பிரஞ்சு மொழி கற்றுக்கொண்டு, பிரஞ்சு நூல்களை மொழிபெயர்க்கத் துவக்கினர். அவருடைய மொழிபெயர்ப்பைத் திருத்தி அமைக்கக்கூடிய அளவு எனக்குப் பிரஞ்சு பாஷை தெரியும். எனவே படிக்க, அதை என்னிடம் கொடுத்தார். அது மொழி பெயர்ப்பல்ல. ஆனல் சாரமாகும்.

இறுதியில், அவருடைய அமெரிக்கா போகவேண்டுமென்ற ஆசையைப் பூர்த்திசெய்துகொண்டார். வெகு பிரயாசைப்பட்டு, அவருக்குக் கப்பல் அடித்தட்டு டிக்கட்டு வாங்கிக்கொடுத்தேன். அவர் அமெரிக்காவிலிருக்கையில், துணி, சட்டையோடு மட்டும் வெளியே சென்றதற்காக, நீதிஸ்தலத்தில் குற்றம் சாட்டப் பெற்ருர். அவர் குற்றவாளியல்ல என்று தீர்ப்புச்சொல்லப்பட்டதாக, எனது ஞாபகம்.

---

ஒரு மனித சரீரத்தில் இருக்கும் "கார்பன்" ௯,௬௦௦ எழுதும் பென்ஸில்கள் செய்யப் போதியதாகுமாம்.

ஃ ஃ ஃ

நியாகரா நீர்வீழ்ச்சியின் மின்சார சக்தியானது, உடல்வலிவு கொண்ட ௪,௫௦,௦௦௦ மனிதரது பூரா சக்திக்குச் சமமாகுமாம்.

ஃ ஃ ஃ

தண்ணீரில் குதிப்பதில் வல்லவரான மிஸ் பெவ்லி வொயிட் என்ற ஆங்கிலமாது, இங்கிலாந்தில் டார்க்குலேஎன்னுமிடத்திலுள்ள ஸாடோலாக்குன்றின் உச்சியிலிருந்து, ௫௦ அடிக்குக் கீழ் உள்ள தண்ணீரில் குதித்தாராம்.

ஃ ஃ ஃ

பிளாடினம் என்ற உலோகம் முன்பு தங்கத்தைவிட விலை குறைவாய் இருந்தது. இப்பொழுதோ அது தங்கத்தின் விலையைவிட ஆறு, எழு மடங்கு அதிகவிலையுடையதாய் இருக்கிறது. உலக முழுவதும் அகப்படும் பிளாட்டினம் ௨௦ ஆயிரம் பவுண்டுகளுக்கு மேலில்லை.

ஃ ஃ ஃ

துவிசக்கர வண்டிகள் எப்படி உபயோகப்படுத்தப்படுகின்றனவோ அப்படியே பர்லினில் இப்பொழுது ஏக சக்கிரவண்டிகளும் உபயோகிக்கப்பட்டு வருவதாய்த் தெரிகிறது. காரியாலயத்திற்குப் போகும் ஒருவன் பாதையில் அதிகக் கூட்டமாயிருந்தால், அந்த ஒற்றைச் சக்கர வண்டியைக் கட்கத்திற்குள் அடக்கிக்கொண்டு, கூட்டங்குறைந்ததும் அதைக் கீழேவிட்டு ஏறிச் செல்லலாமாம்.

---



# அவதூறுவழக்கு.

காரைக்குடி, ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார் ஷையூர் "ஊழியன்" ஆசிரியர் திரு. ராய. சொக்கலிங்கன்மீது தொடர்ந்திருக்கும் அவதூறு வழக்கில் எதிரி கொடுத்திருக்கும் வாக்குமூலம் பின்வருமாறு:—

௧. வாதியின் பிராது காரணம் இல்லாததாகவும் பொருள் இல்லாததாகவும் இருக்கிறது; ஒருவிதத் தவருன உணர்ச்சி கொண்டும், வாதங்களையும் சர்ச்சைகளையும் அடிப்படையாகக் கொண்ட பொது ஜன ஊழிய வாழ்க்கையின் நிலைமைகளையும் சம்பிரதாயங்களையும் அறிந்துகொள்ளாமலும் இந்தப் பிராது செய்யப்பட்டிருக்கிறது.

௨. குறித்த விஷயம் பிரசுரமாயிருக்கும் காலத்தில் (௧௯௨௫-ம் ஆண்டு, டிசம்பர்-மீ, ௧௩-ந்தேதி) எதிரி காரைக்குடியிலில்லை; அதன் பிறகு இரண்டு வாரத்திற்கு மேலான பிறகுதான் காரைக்குடிக்கு வந்தார். சிறப்பாக, எந்தக் காலத்திலும் ஊழியனை எதிரி பொறுத்துப் பார்த்துவரவில்லை. வாதி பக்கத்திய ஏழாவது சாட்சியின் சாட்சியத்திலிருந்து, உதவி ஆசிரியர் கிருஷ்ணய்யரிடம் பத்திரிகையின் பொறுப்பு இருந்துவந்ததென்பது தெளிவாகின்றது. ஆகவே, பிரஸ்தாபக் கட்டுரையில் கண்டிருக்கிற விஷயத்திற்கு இந்த எதிரி குற்றவாளியாக மாட்டார்.

௩. எதிரி வாதியுடன் ஒரு பொழுதும் நெருங்கிப்பழகியதில்லை; சொந்த ஹோதாவில் வருத்தமேனும் விரோதமேனும் உண்டாக யாதும் சந்தர்ப்பமில்லை. ஊழியனில் வெளியான ஒரு விஷயம் சம்பந்தமாகத் தாம் எதிரியைக் கண்டித்ததாக வாதி கூறும் கதை உண்மையல்ல.

௪. குறித்த விஷய சம்பந்தமாக வாதிக்கு ஏதேனும் வருத்தமேற்பட்டிருந்து தக்க காரணம் காட்டிப் பதில் நிருபம் ஒன்று ஊழியனுக்கு அனுப்பியிருந்தால், அச்சமயம் பத்திரிகையைப் பொறுத்துப் பார்த்து வந்த கிருஷ்ணய்யரே, ஊழியன் பத்திரிகையின் கொள்கைகளின்படி, அத்தகைய பதிலையும் பிரசுரித்திருப்பார். எதனலாவது அதைப்பற்றி, வாதியின் அந்தஸ்தைக் கருதி, அவருக்கு ஏதேனும் சந்தேகங்கள் ஏற்பட்டிருந்தால், எதிரி காரைக்குடிக்கு வரும்வரை, வாதியின் கடிதத்தை அப்படியே வைத்திருந்திருப்பார்; எதிரி எவ்விதத் தயங்குதலுமின்றி அதை வெளியிட்டிருந்திருப்பார். இம்முறைதான் வழக்கமானது. (இப்படி நடந்திருந்தால்) பொதுஜன ஊழியத்திலுள்ளவர்களுக்கும் பத்திரிகைகளுக்கும் உள்ள சம்பந்தங்களுக்கு அது முற்றிலும் பொருத்தமானதாயிருந்திருக்கும். வாதி அவ்விதம் செய்யத் தவறியதால் தான் இந்த வழக்குத் தோன்றியுளது என்று எதிரி நம்புகிருர்.

௫. பிராதில் கண்டுள்ள விஷயமானது, ௧௯௨௫-ம் ஆண்டு நவம்பர் மீ ௨௦-ந் தேதி ராமநாதபுரம் ஜில்லா போர்டு கூடிய கூட்டத்தின் நிகழ்ச்சிகளில் பொதுஜன நலன் சம்பந்தப்பட்ட விஷயங்களின்மீது செய்யப்பட்ட நியாயமான மதிப்புரையே ஆகும். அதில் துவேஷம் எதுவும் இல்லை; சந்தர்ப்பத்தின் தெளிவான தேவைக்கு மேற்பட்ட வியாக்கியானமெதுவும் அதில் இல்லை.

௬. குறித்த விஷயத்தில் வாதி சிறப்பாய்ச் சுட்டிக்காட்டியுள்ள பகுதிகள் வாதியைக் குறித்தவையே அல்ல. அந்த விஷயம் இயற்கையாக இரு பாகங்கள் கொண்டதாகும். ஜில்லா போர்டின் கூட்டங்களுக்கு மூன்று மாதம் ஆஜராகாமலிருந்ததால் தங்கள் ஸ்தானங்களை இழந்தவர்களுக்கு அங்கப்பதவியைத் திருப்பி அளித்ததைப் பற்றி முதல் பகுதி விவகரிக்கிறது. அந்த நிகழ்ச்சியைப் பற்றிக் காரணத்தோடு விரிவாக எழுதுங்காலையில், வாதியின் பெயர், தங்கள் ஸ்தானங்களை இழந்தவர்களில் ஒருவராகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தப் பகுதி 'நமது நகரிலுள்ள ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார் அவ்விதம் ஆஜராகாமலிருந்தவர்களுள் ஒருவர் என்பதைப் பொதுஜனங்கள் கவனிக்கவேண்டியது அவசியமாகும்" என்ற சொற்ருெடருடன் முடிவு பெறுகின்றது. பிறகு விஷயத்தின் இரண்டாம்பகுதி துவங்குகின்றது. இந்த நிகழ்ச்சியினின்றும் தோன்றிய பொதுவான கருத்துக்கள் அதில் அடங்கியுள்ளன. அவற்றில் வாக்காளர்களும் அபேட்சகர்களும் பொதுஜன சம்பந்தமான விஷயங்களில் நடந்துகொள்ள வேண்டிய முறையைப்பற்றி அவர்களுக்கு ஒரு வேண்டுகோளும் அடங்கியிருக்கின்றது. அதிகாரிகளை எதிர்த்தாவது அல்லது அதிகமாய்ப் பேசியாவது அவர்களைத் திகைக்கச் செய்ய இஷ்டமின்றி அவர்களுடன் ஒத்துழைக்கும் பட்டதாரிகளான ஒருவகைப் பொதுஜன ஊழியரைப்பற்றிய குறிப்பாகும் அது. குறித்த விஷயத்தை எழுதியவர் அத்தகைய பொதுஜன ஊழியர்களிடம் அதிருப்தி கொண்டவர் என்பது வெளிப்படையாயிருக்கிறது; ஆகவே குத்துதலாகவும், நகைச்சுவையிலும் அவர் எழுதியிருக்கிருர். ஆனல் அதை நடுநிலைமையுடன், முற்றும் ஒரே விஷயமாகப் படித்தால், இரண்டாம் பகுதி வாதியைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை; ஆனல் ஒரு வகுப்பாரைப் பற்றியே சொல்லுகிறது. குறித்த விஷயம் அவதூறுகக் கருதப்பட்டயோதிலும் வழக்குத் தொடர வாதிக்கு உரிமையில்லை.

௭. பிராதில் குறிப்பிடப்பட்டிருப்பனவும் பிராஸிகியூஷன் தரப்பாரால் சாட்சியங்களாக (எக்ஸிபிட்ஸ்) குறிப்பிடப்பட்டிருப்பனவுமான பகுதிகள், பொதுஜனங்களிடை நடைபெறும் பத்திரிகைகளில் விசேஷ அர்த்தத்தில் வழங்கிவரும் மரபுச் சொற்களையும் வழக்கச் சொற்களையுமே முக்கியமாகக் கொண்டிருக்கின்றன. உபயோகிக்கப்பெற்ற வார்த்தைகளை எடுத்துக் கொண்டு, அப்படியே சொல்லுக்குச்சொல் அப்பகுதிகளுக்குப் பொருள் கொள்ளலாகாது. வளர்ந்துவரும் எந்த மொழியிலும் அத்தகைய வார்த்தைகளும் பதத்தொடர்களும் சாதாரணமாயிருக்கின்றன.

௮. 'வாய்மூடி மௌனிகள்' என்ற பதத்தொடர், சொல்லுக்குச் சொல் அர்த்தங்கொண்டால், 'பேசமுடியாத ஊமைகள்' என்ருகும். ஆனல் ஜன சபைகளின் உறுப்பினர்களைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது அவற்றை உபயோகித்தால் "வாதங்களில் விசேஷமான பங்கு எடுத்துக் கொள்ளாதவர்கள்" என்றே பொருளாகும். ஆங்கிலத்தில் கூட "காமன்ஸ்சபையின் மௌன உறுப்பினர்" என்ற பதத்தொடர் உள்ளது. அதன் பொருள் பேசும் உறுப்பில்லாத அங்கத்தினர் என்பதன்று; ஆனல் வாதங்களில் முக்கியப்பங்கு எடுத்துக் கொள்ளாதவர் என்பதே அதன் பொருள். செயலிலும் ஆலோசனையிலும் திறமை கொண்ட ஒரு அங்கத்தினருக்கு அவ்வார்த்தை பொருந்தும். 'தமிழ்சுயாஜ்யா' (௨௮—௮—௨௫) வெளிவந்த பத்திரிகையில் இதை ஒத்த குறிப்பொன்றை உதாரணமாகக் காட்டலாம்:—"சபையில் மௌனம் சாதிக்கும் அங்கத்தினர் சிலர் இருக்கின்றனர். அதில் பள்ளத்தூர் முருகப்ப செட்டியார் ஒருவர்."

(ஆ) "பேசுவதென்ற கெட்டவழக்கம்," இவ்வார்த்தைகளுக்குச் சொல்லுக்குச்சொல் பொருள் கொண்டால், பேச்சே கெட்டவழக்கம் என்று பொருள்கொள்ளலாம். ஆனல் பொதுஜன சபையொன்றைப்பற்றிப் பேசும் பொழுது இவற்றை உபயோகித்தால், பேச்சு கெட்ட வழக்கம் அல்ல என்று மாத்திரமல்ல, அது ஒரு முக்கியத் தகுதி என்றுமாகும்; வாதங்களைக் கொண்டு நடைபெறும் நிர்வாகம் அது இன்றி நடக்க முடியாது. இப்பதத்தொடர் ஆங்கிலத்திலுள்ள 'பேசுவதென்ற கெட்ட வழக்கம்' என்ற பதத்தொடரின்மொழிபெயர்ப்பாகும். ஆங்கிலத்திற் போலவே, நாவைக்கட்டுப்படுத்தாமல், அதிகப்பேச்சுப் பேசுவதில் நம்பிக்கையில்லாத செயல்திறன் படைத்த, வலிமைகொண்ட, மௌனமான மனிதர்களை அது குறிப்பதாகும். தற்காலத்தமிழ் எழுத்தில் இப்பதத்தொடர் அடிக்கடி உபயோகிக்கப்படுகின்றது. உதாரணமாக, 'தமிழ் சுயராஜ்யா' ௨௮—௮—௨௫ தினத்திய பத்திரிகையில், ஒரு அங்கத்தினரைப் பற்றி எழுதுகையில், பின்வரும் குறிப்பு காணப்படுகிறது:—"பேசுவதென்ற கெட்ட வழக்கம் இவரிடம் கிடையாது. இவர் கவர்ன்மெண்டுக்கு ஓட்டுக் கொடுக்கத்தயாராய் எழுந்துநிற்பார்."

(இ) "நாற்காலிகளை அலங்கரித்து அரசாங்கத்தாரிடம் நல்ல பிள்ளை என்றவாறு நடந்து கொள்வதே இவர்களது வேலை." நாற்காலிகளை அலங்கரித்தலென்பதைச் சொல்லுக்குச் சொல் பொருள் கொண்டால், அது அர்த்தமில்லாததாகும்; ஏனெனில் ஒரு மனிதனை அது உயிரற்ற பொருளுக்குச்சமானமாக்கிவிடுகிறது. ஆனல் தற்கால உபயோகத்தில் அது தரும் பொருளெல்லாம், அத்தகைய மனிதன் விவாதங்களில் முக்கியமாய்த் தலையிடாமல் நாற்காலியிலேயே அமர்ந்திருப்பவர் என்பதே யாகும். 'நல்ல பிள்ளை' என்பதையும் சாதாரணப் பொருளில்தான் கொள்ள வேண்டும்; குற்றம் காண ஆவல்கொண்ட ஒரு மனிதனல் உபயோகிக்கப்பட்டதாகக் கபடமாய் பொருள் கொள்ளலாகாது. இதைப் போன்று 'தமிழ் நாடு' (௨௭—௪—௨௪) பத்திரிகையில் வெளியாயிருக்கிறது:— "மிதவாதிகளுக்கு மகஜர்கள் விண்ணப்பங்கள் முதலியன அனுப்புவதிலும் பேட்டிகள் கண்டு பேசுவதிலும் நம்பிக்கை இருக்கும் வரையும், அதிகாரிகளுக்கு நல்ல பிள்ளைகளாக நடக்க வேண்டுமெனும் எண்ணம் இருக்கும்வரையும், பிரிட்டிஷ் அரசாங்கத்தாரிடமிருந்து எவ்வித உரிமையும் அடைய முடியாதென்பது நிச்சயம்."

௮. குறிப்பிட்ட விரிவுரைகள் பொதுவானவையே என்றும், ஏற்கனவே வேறு பத்திரிகைகளில் உபயோகிக்கப்பட்டுள்ளவையே என்றும் வாதியைக் குறிப்பவையல்ல என்றும், மேலே குறிப்பிட்ட வாக்கியங்கள் தெளிவாய்க் காட்டுகின்றன.

௯. குறித்த பகுதிகள் தீர்மானமாக வாதியையே குறிப்பிடுவனவாகவும் எதிரி அதற்குக் குற்றப்பொறுப்பு உள்ளவரென்றும் எந்த முகாந்திரத்தினலாவது கோர்ட்டார் தீர்மானித்தால், அப்பகுதிகள் இயல்பிலேயே அவதூறுனவையல்லவென்று எதிரி தெரிவித்துக் கொள்ளுகிருர்.

௧௦. மேலும், குறித்த பகுதிகள் இயல்பில் அவதூறுனவை என்று கோர்ட்டார் தீர்மானித்தால், குறித்த விஷயம் பொது ஜன நன்மைக்கான ஒரு மதிப்புரை என்றும், அந்த விரிவுரை நேர்மை கொண்டதென்றும், இ. பி. கோ. ௪௯௯-வது பிரிவின் ௩, ௯ வது விலக்குகளின் கீழ்ப் பாதுகாப்புக் கொண்டவை யென்றும் எதிரி தெரிவித்துக் கொள்ளுகிருர்.

௧௧. மேலும், குறித்த விஷயத்தில் நிகழ்ச்சிகளைத் தாக்கிய பாகங்கள் இருப்பதாகக் கோர்ட்டார் தீர்மானித்தால், குறித்த விஷயத்தில் கண்ட விஷயங்கள் பொருளில் உண்மையானவையென்றும் சரியானவையென்றும் அவற்றை வெளியிட்டது பொது நன்மையை உத்தேசித்தே யாதலால், இ. பி. கோ. ௪௯௯- பிரிவின்படி ௧-வது விலக்கின்படி காப்புக் கொண்டது என்றும் ஆகும்.

---

காப்டன் அமண்ட்ஸன் வட துருவத்திற்குச் சென்றபோது, அவரது பிரயாணத்தின் விவரங்களைப் பிரசுரிக்கும் உரிமைக்காக, மூன்று அமெரிக்கப் பத்திரிகைகள் மேற்படி பிரயாணச் செலவுக்கு ௨ லட்சம் டாலர்கள் கொடுத்தனவாம். அப்பிரயாணச் செய்திகளின் மொத்தத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால், வார்த்தை ஒன்று ௨,௦௦௦ டாலர்கள், அதாவது ௬,௦௦௦ ரூபா பெறுமான முள்ளதாகிறதாம்!

# "குறுக்கு வழியில்லை"

(லாலா லஜபதிராய் "பீபிள்" பத்திரிகையில் எழுதுவது.)

சுதந்திரத்துக்குக் குறுக்குவழியைக் காண ஆவல் படைத்திருக்கும் அன்பர்கள் பலர் இருக்கின்றார்கள். அவர்களில் முதியோரும் உண்டு, இளைஞர்களும் உண்டு. ஆனால் சுதந்திரம் என்பது கடுமையுடன் வேலைவாங்கும் தேவியாகும். மனோ, வாக்கு, செயலில், தனது பக்தர்கள் சுத்தமுள்ளவர்களாயிருக்கவேண்டுமென அவள் வற்புறுத்துகின்றாள். தியாகத்தினாலும் கட்டுப்பாட்டுகளிணங்கிய வாழ்க்கையினாலுமட்டுமே, மனத்திலும் கருத்திலும்செயலிலும் தூய்மைஉண்டாகப்பெறும். தற்பெருமை, சுகத்திலாசை, அதிகாரச்செருக்கு, வழ வழப்பான வாழ்க்கை—இவைகளுக்கு மாறான வாழ்க்கை சுதந்திரவாழ்வாகும். நெறிமுறை என்பதற்கு இயற்கையுடன் போராட்டம் என்ற பொருளை, ஒரு கட்டுரையில் அறிஞர் ஹக்ஸ்லி அவர்கள் விளக்கிக் காட்டியிருக்கிறார். இயற்கை கருணையோடு கூடியதாகும். நெறி என்பது தியாகமாகும். நெறிமுறையில் வாழ வேண்டுமானால், கருணை கூர்ந்து இயற்கை நமக்கு அளிக்கும் பல பொருள்களில் சுகம் அநுபவிக்க, நாம் இணங்கலாகாது. சுதந்திரத்தைப்பொறுத்தும், இதே விதிதான்.

சுதந்திரம் என்பது கட்டுக்கடங்காத வாழ்க்கையன்று. தேக சுகத்தைநாடி அதில் மிதமிஞ்சி ஈடுபட்டுக்கிடப்பவர்கள் எளிதிலே தங்கள் சுதந்திரத்தைப் பறிகொடுத்து விடுவார்கள். ஒரு சமயம் சுதந்திரம் இழக்கப்பெறுமானால், ஆத்மத்தியாகம் செய்தாலொழிய, மீண்டும் சுதந்திரத்தை அடைய முடியாது. தன்னைத்தானே சார்ந்து வாழ்வதும் சுயேச்சையும்—இரண்டும் ஒன்றுதான். பிறரைச்சார்ந்து, தங்களுக்குத் தேவைகள் என்ற சுகத்தை நாடுபவர்கள், சுதந்திரமுள்ளவர்களாயிருக்க முடியாது. பிறரை எவ்வளவுக்கெவ்வளவுசார்ந்திருக்கின்றோமோ, அவ்வளவுக்கவ்வளவு சுதந்திரத்தில், குறைந்தபடி நாம் இருக்கின்றோம். இதுதான் நபர் சுதந்திரத்தின் "தங்கமான" அடிப்படையாகும்.

ஆனால் எந்த மனிதனும் முழுதும் பிறனைச் சாராமலிருக்க முடியாது. நாம் அனைவரும் ஒருவரை யொருவர் சார்ந்துதான் வாழ்கின்றோம். எவ்வளவு வரையில் நாம் சார்ந்திருக்கின்றோம் என்பதுதான் சோதனைக் கருவியாகும். நெறி முறையில் வாழ்பவன் தனது "பிறன்பேரில் சார்பை" எவ்வளவு குறைத்துக் கொள்ளலாமோ, அவ்வளவு தூரம் குறைத்துக் கொள்கின்றான். சுகத்தை நாடுபவன் தனது சுகத்தேட்டை வளர்த்துக்கொண்டு போகின்றான். பிறனிடம் எவ்வளவு தூரம் குறைந்த அளவில் நாம் சார்ந்திருக்கின்றோமோ, அதனின்றும் உண்மையான மகிழ்ச்சி தோன்றும். தனி மனிதனைப்பற்றிய வரையிலும் மேற்கூறியது உண்மையாயின், இதுவே சமூகத்தை, நாட்டைப்பற்றியும் உண்மையாகும். ஆனால் எந்த சமூகமும் நாடும் தனித்து இயங்குவது முடியாது. தனது வாழ்க்கைத் தேவைகளுக்காக ஒரு நாடு ஏனைய நாடுகளைச் சார்ந்திருக்கின்றதோ, அதைக் கொண்டு, அந்த நாட்டின் சுதந்திரத்தை நிர்ணயிக்கவேண்டும். ஒரு நாடு ஏனைய நாடுகளின் பேரில் எவ்வளவு தூரம் சார்ந்து நிற்கின்றதோ, அவ்வளவு தூரம் அந்த நாடு அடிமைப்பட்டுக் கிடப்பதாகும். சார்பைத் தொலைப்பதற்குத்தான் சுதந்திரத்துடன் வாழ்வதென்று பொருளாகும். இதற்குத்தான், மகாத்மா காந்தி அடிக்கடி கூறியதைப்போல, ஆத்ம சுத்தி மார்க்கம் என்று பெயராகும்.

ஆத்மசுத்தி மார்க்கத்துக்கு திட்டமும் தியாகமும் கொண்ட வாழ்வு தேவையானது. சில மாதங்கள் திட்டத்துடனும் தியாகத்துடனும் நாம் வாழ்ந்தால், அதனால் சுதந்திரமும், சுயராஜ்யமும்வந்துவிடும் என்று கருதினோம். நாம் எண்ணினது தவறு. அது நீண்ட, தொடர்ச்சியான மார்க்கமாகும். ஜனநிர்மாணத்தை மெல்ல மெல்லக் கட்ட நாம் தயாராயிருக்கின்றோமா? சுதந்திரக் கோயிலுக்குப் பாதை நீண்டது; சோர்வும் சோதனையும் அளிப்பதாகும். அதற்கு ஒரே ஒரு குறுக்குவழிதான் உண்டு. அது தற்கொலையாகும். அதனால் நமது தேகத்தை அழித்துக்கொள்ளலாம்; அப்பொழுதும் நாம் விடுதலை பெற்றுவிட்டோம் என்பது என்ன நிச்சயம்? சுதந்திரத்துக்குக் குறுக்குவழி கிடையாது என்று நமது உள்ளங்களில் நன்றாய்ப் பதித்துக் கொள்ளுவோமாக! திட்டமான வாழ்வையும், அடக்க புத்தியுடன் சமூகத்கொண்டு செய்வதையும் மேற்கொள்ள நாம் தீர்மானித்துக் கொள்ளுவோமாக! சுதந்திர மார்க்கத்தில் நாட்டாரை நடத்திச்செல்ல, அப்பொழுது நம்மால் ஆகும். சட்டமறுப்பு, சாத்வீக எதிர்ப்பு, நேர்முகப் போராட்டம் என்பன கவர்ச்சி கொடுக்கும் சொற்கள். இந்தச் சொற்களுக்கு ஏற்ப நடக்க இயலாதவர்கள், இவைகளை அடிக்கடி உபயோகப்படுத்துகின்றார்கள். ராஜீயதத்துவ முறையில் பார்த்தால், அவைகள் கவர்ச்சியுள்ள நிலையிலிருக்கின்றன. அனுபவமுறையில் கொணரும் உபாயம் என்ற நிலையில் வைத்துக் கருதினால், அவைகள் ஆபத்தை விளைவிப்பனவாகும். வெற்றி வாராவிடினும், சில சமயங்களில் முயற்சி செய்யவேண்டியது அவசியம்தான். ஆபத்தை விளைக்கக்கூடிய சாதனத்தை ஏற்கலாகாது என்று நான் எதிர்வாதம் செய்பவனல்ல. ஆனால், எப்பொழுது வெற்றியின் குறி சிறிதளவும் இல்லையோ, எப்பொழுது அத்தகைய சாதனங்களினால் சீர்குலைவும் பிற்போக்கும் ஏற்படக் கூடுமோ, அப்பொழுது இந்த சாதனங்களை ஏற்பது, ஜனசமூகத்துக்கு விரோதமாகச் செய்யும் கொடுங்குற்றமாகும். எனவே, எவரும் அத்தகைய யோசனை கூறலாகாது.

---

# முன்னும் பின்னும்.

(சீதாபதி எழுதியது)

சொந்த முறையில் சில சொற்களை எழுத விரும்புகின்றேன். நண்பர்கள் தயை செய்து மன்னிக்க வேண்டும். "முன்னும் பின்னும்" தங்களுக்கு மிகுதியும் பிடித்திருக்கிறது என்று அன்பர்கள் பலர் எனக்கு அறிவித்துவிட்டு, "கருத்தின் கடினத்தைச் சிறிது தளர்த்தினால், நன்றாயிருக்கும்" என்ற யோசனையையும் கூடத்தெரிவித்துள்ளார்கள். அன்பர்களின் சொற்களை ஏற்க, நான் தயார்தான். ஆனால் அவர்களை நான் ஒன்று கேட்க வேண்டும். தயை செய்து, அதற்கு அவர்கள் விடையளிப்பார்களாக! பாலில் நீர் கலந்தால் அது நீரா, பாலா?

ஃ ஃ ஃ

கருத்து எவ்வாறு கடினமாயிருக்கக் கூடும்? அகராதியைத் தேடியலைய வைக்கும் சொற்களைக் கையாண்டால், நல்ல இலக்கியத்துக்கு அது ஒருவாறு ஏற்றதல்ல என்று கூறலாம். வழக்கச் சொற்களில், கண்ட அநுபவத்தை எழுதாமல் இருக்க முடியுமா? அல்லது எழுதாமலிருக்கலாமா? கற்பனையாக எழுதினால், கற்பனா சக்தியை அதிகம் படைக்காதவர்களுக்கு, அது இனிக்காமலிருக்கலாம்; அல்லது பொருள் விளங்காமலிருக்கலாம்.

ஃ ஃ ஃ

அனுபவம் என்பது மனிதவர்க்கத்துக்குப்பொதுவாகும். எந்தமனிதனுக்கும் அது தனி உடைமையல்ல. எனவே, அவரவர்கள் தங்கள் தங்கள் அனுபவத்தை ஆய்ந்து பார்த்தால், பொருள் விளங்காத இலக்கியமும் எழுத்தும் உலகிலே இருக்காது. அநுபவ வாயிலாகச் சோதனை செய்யாத எதையும் உண்மையென்று கொள்ளுவதும் தவறு; பொய் என்று தள்ளுவதும் தவறு.

ஃ ஃ ஃ

ஒருவனுக்குத் தலை வலிப்பதாக வைத்துக்கொள்ளுவோம். தலைவலி இன்னதென்று அறியாத மனிதன், பிறன் தலைவலியை அறிந்துகொள்ளக் கூடுமா? தலையை வலிக்கின்றது என்றால், அது பொய் அல்லது பாசாங்கு என்றுதான் தலைவலியை அறியாதவன் கூறுவான். அனுபவம் என்ற பொதுவான உணர்ச்சியும் உடைமையும் உலகத்தில் இருக்கப்பெறுவிடின், மனிதர்கள் ஒருவரோடு உறவு கொள்ளவும் முடியாது; உறவு வேண்டவும் தேவையில்லை. எனவே, அவரவர் கண்ட அனுபவத்தை ஒவ்வொருவரும் ஒளிக்காமல் கூறிவிடின், உலகத்தின் முற்போக்கு எளிதிலே வந்துவிடும்.

ஃ ஃ ஃ

அனுபவம் நிறைந்த வாழ்வு—எத்தகைய அனுபவமாயினும் சரியே, பாதகமில்லை—தான் உயர்ந்த வாழ்வாகக் கருதப்படும். காந்தியின் வாழ்வை மனிதர்கள் ஏன் உயர்வாகக் கொள்ள வேண்டும்? காந்தி அனுபவக்களஞ்சியம். தம்முடைய எந்த உணர்ச்சியையும் அவர் சோதனைக்கு ஆட்படுத்தாமல் இருந்ததில்லை. கருமிகள் தாங்கள் ஈட்டிய பொருளை "பூதம் காக்க" விடுவதைப்போல, மனிதனும் தன்னுடைய உணர்ச்சியின் தன்மையையும் போக்கையும் அறிந்து உணராவிடின் என்ன பயன்?

ஃ ஃ ஃ

மோட்டார் ஓட்டியின் இடத்தில் ஒரு சிறு பையனை வைப்போம். அதனால் பயன் உண்டா? பையன் கைகளையும் கால்களையும் ஆட்டுவான். ஆனால் மோட்டார் நகருமா? ஒருநாளும் நகராது. மறைவில் நின்று கொண்டிருக்கும் மின்சார சக்தியின் உறைவிடத்தையும் தன்மையையும் உணர்ந்து, கையையும் கால்களையும் பையன் ஆட்டினால் பயன் உண்டு. சண்டை இன்னதென்று அறியாத அரசிளங் குமரன் ஒருவன், எதிரிகளை மாய்த்துவிடுவதாக விருதுகூறி, போர்க்களத்துக்குச் சென்றவுடன், பயந்தோடியதைப் போல, அனுபவமில்லாதவர்களின் வாழ்வுச் சொற்களும் பயனுடையவையாகுமா?

ஃ ஃ ஃ

சொற்களில் தோன்றும் அனுபவத்தைக் கொண்டு, ஒரு மனிதனுடைய தன்மையையும் ஆற்றலையும் அளந்துவிடலாம். அனுபவங்களைச் சேர்க்கும் ஆவல் படைக்காத மனிதர்கள் முன்னேற்வர முடியாது. பொய்யன் ஒருக்காலத்தில் நல்லவனாகக் கூடும். ஆனால் பொய்யும் மெய்யும், ஒன்றும் பேசத்தெரியாதவன் மரக்கட்டைக்கு சமமாகும். பொய்யனுக்கு மெய்யின் தன்மையும் பெருமையும் நன்றாக விளங்கும். ஆனால் புத்தியும் அனுபவமும் இல்லாதவர்களுக்கு, அல்லது அவைகளை உபயோகப்படுத்த விருப்பமில்லாதவர்களுக்கு உலகத்தில் ஒன்றுமே விளங்காது.

ஃ ஃ ஃ

சத்தியாக்கிரகத் தன்மை நாட்டுக்குப் புதிது. சத்தியாக்கிரகம் என்ற சொற்கள் நாட்டுக்குப் புதிது. என்றாலும் நமது நாட்டார்கள் எவ்வாறு உணர்ந்து, அறிந்து கொண்டார்கள்? காந்தியின் சொற்களைப் படித்தார்கள்; காந்தியின் அனுபவத்தைப் பார்த்தார்கள்; தங்கள் அனுபவத்தையும் ஏனையோரின் அனுபவத்தையும் ஆய்ந்தார்கள். சத்தியாக்கிரகம் இன்னதென்று நம்மவர் கண்டு கொண்டார்கள்.

ஃ ஃ ஃ

அனுபவம் வளர்வதற்கு ஆற்றலும் ஆவலும் வேண்டும். அனுபவத்தை எவரும் வாயில் கொண்டு ஊட்ட முடியாது. ஊட்டினாலும் பயன்படாது. ஏனெனின் நோயாளியின் நாக்கு கசப்பாகச் சுவைத்தால், தேவர்கள் உண்டதாகக் கூறப்படும் தேனும் தினைமாவும், ராமலிங்க சுவாமிகள் பாக்களில் சமைத்திருக்கும் கற்கண்டுப் பொங்கல் கூட, அவர்களுக்கு இனிக்காது. நாவிலே சுவையை இழந்தவர்கள் சமையற்காரனிடம் கோபிப்பதில் பயன் உண்டா? மனிதர்களின் சராசரிச் சுவை என்ற அளவைக் கொண்டுதான், சமையற்காரன் சமைக்க முடியும்; அல்லது தனது அனுபவத்துக்கு ஏற்றவாறு சமைக்க முடியும்.

ஃ ஃ ஃ

அனுபவம் என்பது அவியா விளக்கு. மனிதர்கள் இறந்து, பட்டுப் போகலாம். ஆனால் அனுபவம் என்றைக்கும் அழியாதது, அவியாதது. மனச்சாட்சி வளர்ந்ததும், வளர்வதும், வளரப்போவதும் அனுபவத்தின் மூலமாகத்தான். சுயராஜ்ய அனுபவம் தங்கள் வாழ்வில் சிறிதளவும் இருக்கப் பெறாதவர்களுக்கு சுயராஜ்யம் விளங்குமா? உயர்ந்த இலட்சியம் என்பதற்கு, கைகூட முடியாத இலட்சியம் என்று கொண்டு, சுயராஜ்ய நோக்கத்தைத் தள்ளிவிடக்கூடுமா?

ஃ ஃ ஃ

அநுபவமில்லாதவர்களுக்கும் அல்லது தங்கள் அனுபவத்தை ஆய்ந்து தொகுக்காதவர்களுக்கும், எல்லாக்கருத்துக்களும் உயர்வாகப்படலாம். அல்லது கருத்துக்கள் விளங்காமலிருக்கலாம். அதைக்கொண்டு, கருத்துக்களின் கடினத்தைக்குறைப்பது என்பது பொருளில்லாத யோசனையாகும், கருத்தின் உண்மையை ஒளிப்பதாகும். உண்மையை ஒளிக்க, நண்பர்கள் உத்தரவு கொடுப்பார்களா?

---

# புதிய நட்பு.

பிரான்சும் ஜர்மனியும்.

('பீபிள்' பத்திரிகையினின்றும் மொழி பெயர்க்கப்பட்டது. ப-ர். ஊழியன்.)

ஐரோப்பிய இருப்புச்சங்கம் (வெளி வியாபாரப் போட்டியினின்றும் காத்துக்கொள்வதற்கான சங்கம்) அமைக்கப்பட்டதென்ற அறிக்கை ஒரு பெருத்த முக்கிய அரசியல் சம்பவமாகும். ஜர்மானிய மனப்பான்மையினின்றும் பிரான்சு தப்பித்துக்கொண்டது என்பது அதன் பொருளாகும். ஜெர்மனி சர்வதேச சங்கத்தில் ஸ்தானம் அடைந்து கௌரவம் பெற்றதற்கு முன்னமேயே, ரூர் பிரதேசத்தை (ஜர்மானியர்) வைத்திருந்தது, தானும் அனுபவியாமல் பிறரும் அனுபவிக்கவிடாமற் செய்வதாகும் என்று பிரஞ்சு அரசியல் நிபுணர்கள் அறியவந்தனர். வெர்சேல்ஸ் உடன்படிக்கைமூலம், யுத்தத்திற்கு முன்பு ஜெர்மானியருக்குச்சொந்தமான இரும்பு விளையும் பிரதேசங்களெல்லாம் பிரான்சுக்கு மாற்றப்பட்டன; நிலக்கரிப் பிரதேசங்கள் மட்டிலும் ஜர்மனியின் வசமே யிருந்தன. ஜர்மனியின் நலத்தையாவது பிரான்சின் நலத்தையாவது நோக்கினால் நிலக்கரியும், இரும்பும் இனிப்பிரிந்திருக்க முடியாது. உயர்ந்த பொருளாதார நிலைமையை விரும்பும் "சர்வதேச-உணர்ச்சினர்" அரசியல் வாதிக்கு மேற்பட்ட பார்வை கொண்டவை. சிலகாலத்திற்கு முன் ஜர்மனிக்கும் பிரான்சுக்கும் பொருளாதார ஒப்பந்தம் ஒன்று நடைபெறுவதாக ஒரு பிரஸ்தாப மிருந்துவந்தது. ஜர்மனி சர்வதேச மகாநாட்டில் நுழைந்து லோகார்னோ உடன்படிக்கைகளுக்கு உட்பட்ட உடனே ஐரோப்பிய இரும்புச்சங்கம் ஒன்று அமைக்கப்பட்டதாகச் செய்தி வந்திருக்கிறது; இச்செய்தி பிரஞ்சு இரும்பு, ஜெர்மன் நிலக்கரியுடன் இணைக்கப்பட்டது என்பதையே அறிவிக்கிறது.

உண்மையில், ஐரோப்பிய அரசியலில், கடிகாரக் குண்டு (பெண்டுலம்) போல் ஆடிக்கொண்டிருக்கும் சர்வதேச மகாநாடு இத்துறையில் வெகு தீவிரமாய் ஆடுவதாய்க் காண்கிறது. இதாலிய ஏதேச்சாதிகாரி (முசோலினி)யை ஸர் ஆஸ்டின் சாம்பர்லேன் பேட்டி கண்டு பேசியது பிரான்சில் சந்தேகத்துடன் நோக்கப்படுகிறது; தாயிர் என்னுமிடத்தில் ஹெர் ஸ்டிரெஸ்மானும் பிரையாண்டும் சந்தித்ததற்குப் பிரதியாகும் இது என்று பிரஞ்சுப் பத்திரிகைகள் வியாக்கியானம் செய்கின்றன. ஸர் ஆஸ்டின் இந்த வியாக்கியானங்களில் ஏதும் உண்மையில்லை என்று மிக ஊக்கத்துடன் விளக்கமாய்க் கண்டிக்கிறார்; பிரஞ்சு ஜர்மன் கூட்டுறவுக்கு எதிராகத் தாம் இத்தாலியுடன் கூட்டுறவு கொள்ளவில்லையென்று மறுக்கிறார். இக்கண்டன மறுப்புகளுக்குப் பொருள் இல்லாமலில்லை.

---



# தாலூக்கா போர்டு.

(நமது விசேட நிருபரிடமிருந்து)

இச்சபையின் கூட்டமொன்று அக்டோபர்மீ உ-ம் நாள் சனியன்று காலை கூ-மணிக்கு காரியாலயக்கட்டிடத்தில் கூடிற்று. அவ்வமயம் திருவாளர்களான ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார், எம். ஆர். சேஷய்யர், சி. சுந்தரமய்யர், சி. மு. அரு. முத்துராமன் செட்டியார், து. வெங்கட்டராம அய்யங்கார், எ. மு. முத்தப்ப செட்டியார், சித. நா. ராம. நாராயணன் செட்டியார், சௌமியநாராண அய்யங்கார், அடைக்கன் கங்காணி, அரு. காளையராஜா எம். ஆர். பி. செய்து முகம்மது சாகிப் பகதூர், என். எஸ். வெங்கட்டராமய்யர் ஆகிய பதின்மர் வந்திருந்தனர். அன்று ௪௯ விடயங்கள் பைசலுக்கும் கொணரப்பட்டிருந்தன. அவைகளில் பெரும்பாலான விஷயங்கள் மாமூல்படி அனுமதிக்கப்பட்டன. தாலுக்கா போர்டு ஏரியாவை சர்க்கிள்களாக பிரிக்கக் கமிட்டிகளின் சிபார்சுகள் இன்னும் பூரா கிடைக்காததால் இவ்விஷயம் அடுத்த கூட்டத்திற்கு ஒத்திவைக்கப்பட்டது.

தேவகோட்டை எலிமெண்டரி போர்டு பாடசாலைக்கு கட்டிடம் கட்டிக்கொடுக்க வேண்டுமென அரசாங்க உத்திரவுபற்றி ஆலோசிக்கப்பட்டதில், ஒரு வருடத்திற்குள் கட்டிக் கொடுப்போம் எனத் தீர்மானிக்கப்பட்டது.

வேறு பல தீர்மானங்கள் நோட்டீசு கொடுக்கத் தீர்மானிக்கப்பட்டதுடன் சிலதீர்மானங்கள் ஒத்திவைக்கப்பட்டும் விட்டன.

பின்னர் தலைவர் ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார் அவயவிகளைப் பார்த்து "ராமனாதபுரம் ராஜாவையே மறுபடியும் ஜில்லா போர்டு தலைவராக நியமிக்கவேண்டுமென இராமனாதபுரம் தாலூக்கா போர்டும், சிவகெங்கை தாலூகா போர்டும் தீர்மானம் போட்டிருக்கிறார்கள். அதுபோல நாமும் தீர்மானம் போடவேண்டும்" எனக் கூறினார். ஏனைய அவயவிகள் வாளாவிருந்தனர். ஜனாப் எம். ஆர். பி. செய்யதுமுகம்மதுசாகிப் அவர்கள் "ஜில்லாபோர்டு தலைவர் ராமனாதபுரம் ராஜா அவர்கள் சரியாய் நடந்துகொள்வதில்லை; போர்டின் தீர்மானத்தை நிறைவேற்றிவைக்க அவர் கடமைப்பட்டிருக்க அவர் நிறைவேற்றுவிட்டால் அது அவயவிகளை அவமதிப்பதேயாகும். இது மிக அவமானமாகவிருக்கிறது. ஆதலால் அவரை மறுபடியும் நியமிக்க நாம் தீர்மானம் செய்யவேண்டிய அவசியமில்லை" எனக் கூறினர்.

உடனே தலைவர் உதவி தலைவரிடம் காதோடு காதாய் ஏதோ கூறினதும், உதவி தலைவர் சேஷய்யர் அவர்கள் எழுந்து, ராமனாதபுரம் ராஜா பல அரிய காரியங்களெல்லாம் செய்திருக்கிறாரென்றும், வைகைப் பாலம் தேவிப்பட்டணம் ரோடு முதலிய காரியங்கள் முடிவுபெறும் வரையே அவர் தலைவர்பதவி தாங்கப்போவதாயும், ஆதலால் நாம் அவரையே மறுபடியும் நியமிக்க தீர்மானிக்கவேண்டுமெனவும் கூறினார். சி. சுந்தரமய்யரவர்களும் அதை ஆதரித்துச் சில கூறினார்கள். பின்னர் ஜனாப் செய்து முகம்மதுசாகிப் அவர்கள் எழுந்து "மிக முக்கியமானதும் ஹிந்துக்களுக்கு மிக உபயோகப்படத் தகுந்ததுமான, சேது ரஸ்தா பாழ்பட்டுக் கிடக்க, ராமனாதபுரம் ராஜா அவர்கள் தேவிபட்டணம் ரோடு போடுவது தமது சொந்த லாபம் கருதியேயாகும். மேலும் ரயிலுக்கடுத்துப் போய்க்கொண்டிருக்கும் ரோட்டை ட்ரங் ரோட்டாக எடுத்துக்கொள்ள முயற்சிக்கப்பட்டு எடுத்துக் கொண்டாயும் விட்டது. சேது ரஸ்தாவை திருத்தி ஏன் ட்ரங் ரோட்டாக ஆக்கப்படாது? இப்படிச் செய்தாலல்லவோ அவர் பொது நன்மைக்குப் பாடுபட்டவராவர்" என கூறினார். பின்னர் தலைவர் உதவி தலைவரையும், சி. சுந்தரமய்யரையும், எ. மு. முத்தப்ப செட்டியாரையும் கூப்பிட்டு, சாயபு அவர்களை சமாதானப்படுத்துமாறு கேட்டுக்கொண்டார். அதுபோல மேல்கண்ட மூவரும் ஜனாப் சாயபுவை வெளியே கூட்டிவந்து, மிகமிகச் சமாதானம் சொன்னார்கள். அதற்கு அவர் இணங்க மறுக்கவே "மெஜாரிட்டியிருக்கிறது. நீங்கள் பிணங்குவதால் பயனில்லை. ஆதலால் வந்து ஏக மனதாய் நிறைவேற்றிவிடுங்க" ளென கூறினர்கள். அதற்கு ஜனாப்சாயபு அவர்கள் "மெஜாரிட்டியிருந்தால் எதுவும் செய்யலாம்" எனச்சொல்லிவிட்டு, கட்டிடத்தைவிட்டு வெளியே போய்விட்டார். அவரைப்பின்பற்றி திருவாளர் து. வெங்கட்டராமய்யங்காரும் கூட்டத்தைவிட்டு வெளியே போய்விட்டார். பின்னர் ராமனாதபுரம் ராஜாவையே மறுபடியும் ஜில்லா போர்டு தலைவராக நியமிக்க வேண்டுமென அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்வதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# தேவகோட்டை.

(நமது நிருபரிடமிருந்து)

ஆனந்த நடனகானசபா:—திருவாளர் தி. அ. சு. அ. சுப்பிரமணியன் செட்டியாரவர்களைக்காரியதரிசியாகக் கொண்ட இச்சபையாரால் நவராத்ரி விசேடத்தை முன்னிட்டு புரட்டாதி மாதம் உஉ-ம் நாள் வெள்ளியன்று சங்கீதமணி ராமானுஜய்யங்காரவர்களால் "வாய்ப்பாட்டுக் கச்சேரியும்" உ௩-ம் நாள் ஞாயிறு அன்று குற்றாலம் பட்டு, பத்மாவதி எனும் இரு பெண்மணிகளால் "வாய்ப்பாட்டுக்கச்சேரியும்", உ௫-ம் நாள் செவ்வாயன்று திருவாதி சாதுகணபதி சகோதரர்களால் "ஜலதரங்கக்கச்சேரியும் வாய்ப்பாட்டுக் கச்சேரியும்", உஅ-ம் நாள் வியாழனன்று கும்பகோணம் கோமளம், ஸ்ரீனிவாசலு எனும் இருபெண்மணிகளால் "வாய்ப்பாட்டுக் கச்சேரியும்" இனியபக்க வாத்யங்களுடன் நடந்தன. கச்சேரிகள் திறம்பட நடந்ததால் சங்கீதப்பிரியர்கள் பலர் விஜயஞ் செய்திருந்தனர். இச்சபை வாலிபர்களின் முயற்சியால் ஆரம்பிக்கப்பட்டும் பெரியோர்களால் ஆதரிக்கப்பட்டுமிருப்பதால், இச்சபை முன் இருந்த சங்கீதசபையைப்போல அற்ப ஆயுளாய்ப்போய்விடாது, நீடூழிகாலம் செவ்வனே நடந்து வருவதற்கு அதன் அவயவிகள் வேண்டுவன செய்யத் தவறமாட்டார்கள் என நம்பப்படுகிறது.

சரஸ்வதிவாசகசாலை:—ஆயுதபூஜையன்று புல்லாங்குழல் கச்சேரி நடந்ததுடன், திருவாளர் ப. வ. லெ. லெட்சுமணன் செட்டியார் தலைமையில் மூன்று பிரசங்கங்களும் நடந்தன.

யூனியன் போர்டு:—சுமார் ஆறு ஸ்தானங்கள் எலக்டர்களால் பூர்த்தி செய்யப்படவேண்டியதிருக்கிறதென அறிகிறோம். தலைவர் மாணிக்கவாசகம் அவர்கள் தேர்தல்கட்கு நாட்கள் குறிப்பிட்டாலல்லது எப்படித் தேர்தல்கள் நடைபெறும்? இனியும் வாளாவிருக்காது நண்பர் மாணிக்கவாசகம் அவர்கள் யூனியன் போர்டு விஷயங்களில் சற்று நாட்டம் வைத்து தங்கடனாற்ற வேண்டுவது மிக இன்றியமையாததாகும்.

மாணவர் சங்கம்:—இச்சங்கத்தின் ஏழாவது ஆண்டு விழா ஐப்பசி ௪-௫ தெய்திகளில் சிதம்பர விலாஸ் பங்களாவில் நடைபெறும் என அறிகிறோம்.

# கப்பல்.

'எரின்புரா' கப்பல் இம்மதி கூ-ம் நாள் வெள்ளியன்று சென்னையிலிருந்து ரங்கூனுக்குப் புறப்படும். 'எலிபண்டா' கப்பல் இம்மதி க௦-ம் நாள் புதனன்று சென்னைக்கு வந்து சேர்ந்து, க௪-ம் நாள் ஞாயிறன்று அங்கிருந்து ரங்கூனுக்குப் புறப்படுகிறது.

# உள்ளூர்.

| | |
|---|---|
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | ௧—௦—௦ |
| சென்னை உண்டியல் வட்டம் | ௦—௪—௦ |
| பவுன் (பொற்காசு) | க௫—௯—௫ |
| பம்பாய் வெள்ளி ரூபாயிடை | ௦—க௦—௦ |

புரட்டாதிமீ உஅ-ம் நாள் இவ்வூர் யூனியன்போர்டுக்கு ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்க நடந்த கூட்டத்தில், திருவாளர் முரு. வீர. சாமினாதன் செட்டியாரவர்கள் ஏகமனதாய்த், தேர்ந்தெடுக்கப்பட்டார் என அறிகிறோம்.

காணப்பட்டது.

சில தினங்கள் முன் இவ்வூர் வீரியன் கம்வாய் பள்வாயில் ஒரு சாவிக்கொத்து கண்டெடுத்தேன். வெள்ளிக்கைபிடியில் ஷை வளையத்தில் ௬ சாவிகளும் சீல் ஒன்றும் கோர்க்கப்பட்டிருக்கிறது. உரிமையாளர் பிறஅடையாளங்களையும் தெரிவித்து ஊட்யனுபிசில் பெற்றுக்கொள்ளலாம்என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

# தேவகோட்டை.

சரஸ்வதி வாசகசாலை:— இவ் வாசக சாலையில் இப்புரட்டாதி திங்கள் உக-ம் நாள் சரஸ்வதி பூசையன்று மாலை ௪-மணிக்கு மாயூரம் நடராஜ ஓதுவாரால் பக்க வாத்தியங்களுடன் புல்லாங்குழற் கச்சேரி ஆரம்பித்து ௯-மணிக்கு முடித்து பின்னர் ௯-௩௦க்கு திருவாளர் பவ. லெ. இலக்குமணச் செட்டியார் அவர்கள் தலைமையில் திருவாளர்களான மெ. சி. மாணிக்கவாசகச் செட்டியார், சு. மு. சுப்பிரமணியச் செட்டியார் வெ. மு. சோம. இராமனுதச் செட்டியார் ஆகிய இவர்கள் முறையே "சரஸ்வதி பூஜை" "தருமம்" "ஜீவகாருண்யம்" என்ற பொருள் பற்றி மிக அழகாக சொற்பெருக்கிட்டார்கள். பின் தலைவரவர்களால் முடிவுரை கூறப்பெற்றதும் இவ்வூர் சொர்ணமூர்த்தி பெண்பாடசாலை மாணவிகளால் அழகிய பாரதியார் கீதங்கள் பாடப்பெற்று அவை இரவு அ-மணிக்கு இனிது நிறைவெய்தியது என காரியதரிசி மெ. சி. மாணிக்கவாசகன் எழுதுகிறார்.

# எய்ப்பா? எளனமா?



கிருஸ்தவப்பாதிரி:—இந்தியா நமது வேலைக்குச் சிறந்த நாடாக விருக்கின்றது. ஏசுவின் ஒளியைப் "பஞ்சமர்கள்" இடையே, பரப்பவேண்டும்.

ஆசாரத் திருத்தக்காரர்:—ஆதித்திராவிடர்களின் நிலைமை மிகவும் பரிதாபமாயிருக்கின்றது. இவர்களைப் பற்றி மகாநாடுகளில் சில தீர்மானங்கள் கொண்டு வரவேண்டும்.

தேசியவாதி:—ஆதித்திராவிட சகோதரர்களுக்கு பொது ரஸ்தாக்களைத் திறந்து வைக்கவேண்டும். சுதந்திரம் அவர்களுக்கு மில்லையா?

ஆதித்திராவிடன்:—இவர்கள் யாவரும் சுய நலக்கண்களைக்கொண்டு, எங்களைப் பார்க்கின்றார்கள். எங்கள் உழைப்பின் பயனை உண்டு, இவர்கள் யாவரும் "கடவுள் முதல் கடுகு" வரையில் உள்ள பொருள்களைப் பற்றி மனம் கூசாமல் பேசுகிறார்களே, அதுதான் ஆச்சரியம்.

# தந்தி.

(ஊழியனுக்காக வந்த தந்தி.)

பினங்கு அட்சய ஐப்பசிமீ ௨௨

| | |
|---|---|
| உண்டியல்விலை | நூற்றைம்பத்தைந்து |
| ஈயம் விலை | நூற்றைம்பத்தாறு |
| ரப்பர் விலை | தொண்ணூற்றைந்து |

ரங்கூன் அட்சய ஐப்பசிமீ ௨௨

| | |
|---|---|
| மீடான் அரிசி | ௯அ௦—௦—௦ |
| புழுங்கல் மில்சார் அரிசி | ௬௦௦, ௬௧௦—௦—௦ |
| ஷை நசேன் ,, | ௯௧௯, ௯௨௦—௦—௦ |
| ஏ ஒன் குருணை | ௯௪௦, ௯௪௯—௦—௦ |
| பி: ஒன் ,, | ௯௨௦—௦—௦ |
| காசுக்கட்டி | ௧௧௯—௦—௦ |
| மிளகாய் | ௧௧௦, ௧௨௦—௦—௦ |
| கொத்தமல்லி | ௯௦, ௯௯—௦—௦ |
| புளி | ௨௫, ௨௯—௦—௦ |
| கொள்ளு | ௫௬௦, ௫௪௦—௦—௦ |
| திப்பிலி | ௯௯௦, ௬௦௦—௦—௦ |
| காராமணி | ௬௨௯—௦—௦ |
| படகு நெல் | ௨௧௯—௦—௦ |
| ரயில் நெல் | ௨௧௦—௦—௦ |
| ஸ்பெஷல் நெல் | ௪௬௯—௦—௦ |
| சிறியமில் அரிசி | ௯௪௦—௦—௦ |
| உளுந்து | ௯௯௦, ௬௦௦—௦—௦ |
| தட்டைப்பயறு | ௯௪௦—௦—௦ |
| மொச்சை | ௬அ௦—௦—௦ |
| கடலை | ௫௬௦—௦—௦ |
| சிகப்பு பீனிஸ் | ௫௬௦—௦—௦ |
| வெள்ளை பீனிஸ் | ௨எ௯—௦—௦ |
| எஸ். க்யூ. அரிசி | ௯௯௯, ௯௬௯—௦—௦ |
| வி. ஒன் ,, | ௪௬௦—௦—௦ |
| பவுன் விலை | ௧௫-௧௦-௦ |

# இரங்கூன்.

இரங்கூன் தனவைசியஇளைஞர் தமிழ்ச்சங்கத்தில், நிகழும் அட்சயஆண்டு ஆவணித்திங்கள்இருபத்தேழாநாள் ஞாயிற்றுக்கிழமை மாலை ௪-மணி முதல் செக்கந்திராபாக்கம் அற்புதாநந்த ஸ்வாமிகள் (தென் இந்தியாசமரச சன்மார்க்க சங்கக் கௌரவப் பிரசாரகர்) அவர்களால் "அப்பர் சரித்திர ஆராய்ச்சி" என்பது குறித்து அரிய சிறந்த ஓர் சொற்பொழிவு நிகழ்த்தப்பெற்றது. ஆ. பழ. சொக்கலிங்கன் வந்தனங்கூறிப் பூமாலை சூட்ட அவை எ. மணிக்கு இனிது நிறைவெய்தியது.

மேற்படி சங்கத்தில் நிகழும் அட்சய ஆண்டு புரட்டாசித் திங்கள் மூன்றாம் நாள் செக்கந்திராபாக்கம் அற்புதாநந்த ஸ்வாமிகள் மாலை நான்கு மணி முதல் அவர்களால் 'திருஞானசம்பந்தர் ஆராய்ச்சி' குறித்து அப்பெருமான் சரிதமும் அவர்தம் கால அளவும் (பிறந்தது முதல் முத்தியிற் சேரும்வரை ஜீவிதகால நூற்றாண்டின் கணக்கு) எடுத்துக்காட்டி நன்கு சொற்பொழிவாற்றினார்கள். இடையில் திருவாளர்களான சொ. விசுவநாதச் செட்டியார் ஊக்கம் என்பது குறித்தும் செ. வீர. நடராசச் செட்டியார் புகழ் என்பது குறித்தும், மு. அரு. மணிவாசகச் செட்டியார் நட்பு என்பது குறித்தும் பிரசங்கித்தார்கள். முடிவில் சங்கத்தலைவர் திருமிகு மு. இலக்குமணச் செட்டியாரவர்கள் அனைவருக்கும் வந்தனம்கூற அவை ஏழுமணிக்கு இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

வைக்கோலினால் செய்யப்பட்டு, பெரிய கடிகாரம் அமைக்கப்பட்டதாக, ஒருதொப்பி இப்பொழுது லண்டனில் தோன்றியிருக்கிறது. அத்தொப்பியிலுள்ள கடிகாரம் மிக ஒழுங்காக மணி காட்டுகிறதாம.

ஃ ஃ ஃ

லண்டன் ஸேண்ட்பால் மாதாகோவிலைச்சுற்றிலும் ஆறுமைல் சுற்றுப் புறத்திற்குள்௨௯௬ ரயில்வே ஸ்டேஷன்கள் இருக்கின்றன; ௨௦ மைல் சுற்றுப் புறத்திற்குள் ௪௦௦ ஸ்டேஷன்கள் இருக்கின்றன.

## பொருள் அடக்கம்.






மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.


காரைக்குடி
அட்சய-ஹு ஐப்பசி-மீ ௩-௨


# கலால் கமிட்டி — — — — — அறிக்கை.

சென்னை மாகாண கலால் இலாகா நிர்வாகத்தைத் திறம்பட நடத்த யோசனை கூறுமாறு, கலால் யோசனைக் கமிட்டி யொன்று, சென்னை அரசாங்கத்தாரால் நியமனம் செய்யப்பெற்றது. கலால் யோசனைக் கமிட்டியார் தங்கள் முடிவை, அரசாங்கத்தாருக்குத் தெரிவித்துவிட்டார்கள். கமிட்டியாரின் சிபார்சுகளின் பேரில், அரசாங்கத்தார் பிறப்பித்திருக்கும் உத்தரவு, இப்பொழுது வெளிவந்திருக்கிறது. அந்த உத்தரவை முழுதும் படிக்கு முன், நம்முடைய மனத்தில் துயரம் மிகுதியும் எழுந்தது. தவிர, முழுதும் படிப்பது பயனற்ற வேலை என்றும் தோன்றிற்று. மனக்கோணல்கொண்டவர்களின் வாதங்களைச் சுற்றிச் சுற்றிக் கொண்டு உழலும் வேலையைப்போல, அரசாங்கத்தாரின் உத்தரவைப் படிப்பது, தோன்றிற்று. முதலில் கோணில் முற்றும் கோணும் என்று சொல்லவும் வேண்டுமா?

இந்தியாவில் பூரண மதுவிலக்கு சாத்தியமான சங்கதியல்ல என்ற பல்லவியுடன் உத்தரவு துவங்கியிருக்கிறது. இதற்கு அரசாங்கத்தார் என்ன காரணம் கூறுகின்றார்கள்? போதைக் குடிச் சாமான்கள் இந்தியாவில் எளிதிலே அகப்படுகின்றனவாம். இந்தக் காரணத்தின் விநோதத்தை அரசாங்கத்தார் அறியவில்லைபோலும்! உணவுப் பொருள்கள் மிகுதியும் விளையும் இந்தியாவில் நிரந்தரப் பஞ்சம் இருப்பதன் காரணம் என்ன? உணவுப் பொருள்கள் மிகுதியும் விளையாத ஆங்கில நாட்டில், பஞ்சம் இல்லாமையின் காரணம் என்ன? தவிர, திராட்சைகள் அதிகமாகப் பயிராகாத ஆங்கில நாட்டில், மதுபானம் குறைந்து நிற்கின்றதா? ஆங்கில நாடு குளிர்ந்த தேசமானதால், மதுபானம் தேவைபோலும்! போதைச் சாமான்கள் இந்தியாவில் மலிவாக விளைவதால், இந்தியாவில் மதுபானம் மிகுதிபோலும்! எந்த நிகழ்ச்சிக்கும், சாமர்த்தியம் கொண்ட காரணத்தைக் காண்பிக்க முடியாதா? நீர்வளமும் நிலவளமும் ஒருங்கே சேர்ந்து விளங்கும் அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களில் பூரண மதுவிலக்குச் சாத்தியமாகிவிட்டது. அந்த நாட்டாருக்கு மட்டும் பூரண மதுவிலக்குச் செய்ய, எவ்வாறு முடிந்தது? நொண்டிச் சமாதானம் கூறும் மனப்பான்மை கொண்ட அரசாங்கம் இருக்கும் வரையில், எந்த நற்காரியமும் சாத்தியப்படாது என்று தான் அந்த அரசாங்கத்தார்கள் கூறுவார்கள். ஆனால் பொது ஜனங்கள் அரசாங்கத்தார் கூறும் சமாதானத்தை, தொண்டையில் படாமல் விழுங்கவேண்டுமென்பதுண்டா?

வருமானம் இல்லாமல் குடும்பமும் அரசியலும் நடைபெறமாட்டா என்பதை நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனால் பிறர் பொருளைப் பொறுப்பின்றி, "மைனர் விளையாட்டு"ச் செய்பவன் உருப்படாமல் போவதுமன்றி, குற்றத்துக்கும் ஆளாவான் என்றுகூறுவது பொய்யாமா? தேசபக்தர்கள் பூரண மதுவிலக்கைப்பற்றிச் சிறிது நாவசைத்தாலும், உடனே பொது ஜனங்களின் கல்வித் தேவையைப் பற்றி அரசாங்கத்தாரின் கருணை உள்ளத்தில் கவலை தோன்றிவிடுகின்றது. கள்ளுக்கும் கல்விக்கும் இடையேயுள்ள சூட்சுமமான தொடர்பு இந்திய அதிகார வருக்கத்தினருக்கு மட்டும் தான் தெரியும்போலிருக்கிறது. கல்வி வசதிகளைக் காண, ஏனைய நாடுகளில் கலால் வருமானத்தைத் தான் அரசியல் நிர்வாகிகள் கையாளுகின்றனரா? இது உண்மையாயின், பூரண மதுவிலக்கு ஏற்பட்டிருக்கும் அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களில், கல்வியே இல்லை அல்லது குறைவு என்ற முடிவுக்கல்லவா நாம் வரவேண்டும்? இந்த முடிவு உண்மை என்று இந்திய அரசாங்கத்தார் ஒப்பம் வைப்பார்களா? "ஒப்புக்கு" ஒப்பம் வைத்தாலும், இந்திய அரசாங்கத்தாரைக்காட்டிலும் மதியீனர்கள் எவரும் இல்லை என்று அமெரிக்காவாசிகள் கூறத் துணியமாட்டார்களா?

கலால் வருமானம் போய்விடுமே என்று ஏன் இந்திய அரசாங்கத்தார் நடுங்கவேண்டும்? ஒழுங்கான முறையில், ஜனங்களுக்குக் கட்டுப்பட்டு நடைபெறும் அரசாங்கம், வருமானத்தைப்பற்றியும் அரசாங்கச் செலவிற்குத் தேவையான பொருளைப்பற்றியும் உள்ளத்தில் சிறிதளவும் கவலைப்பட வேண்டியதில்லை. நீட்டின கை மடங்காமல், ஏதேச்சாதிகாரம் கொண்டு, கண்டபடி செலவு செய்து கொண்டிருக்கும் இந்திய அரசாங்கத்தார், தாம் செய்யும் செலவினங்களைக் குறைக்க எப்பொழுதேனும் எண்ணங்கொண்டதுண்டா? "செலவு தேவை; எனவே வருமானமும் தேவை. இவ்விரண்டு வேலைகளையும் செவ்வனே நடத்த, அதிகாரவருக்கத்தினர் மிக மிகத் தேவை. அவர்களுக்கு யோசனை கூற எவரும் தேவையில்லை. மீறி, யோசனை கூறினும், பயனில்லை" என்ற மனப்பான்மை கொண்டிருக்கும் இந்திய அரசாங்கத்தார், இந்தியர்களை சுயராஜ்ய வழியில் அழைத்துச்செல்ல அரும்பாடு படுகின்றார்களாம்! பாவனையினால், எவருடைய ஆதிக்கமும் இந்த உலகில் இது வரையிலும் நிலைத்ததில்லை. அதிகார வருக்கத்தினரின் பாவனை எவ்வளவு காலந்தான் செல்லும், பார்ப்போம்.

கள்ளு சாராயக்கடைகளைக் குறைத்து விடுவதால், திருட்டுக்குடி அதிகமாகி விடுகின்றது என்று அனுபவத்தில் பார்த்தாகிவிட்டது என்று அரசாங்கஉத்தரவில் காணக்கிடக்கின்றது. குற்றப் புத்தகத்தில் குற்றப் பிரிவுகளைக் குறைத்தால், குற்றங்கள் மலிந்து போய்விடுமோ? கள் விற்கலாம் என்று ஸர்க்கார் உத்திரவிட்டிருப்பதனாலே தான், கள் இறக்க முதலாளிகள் மரங்களைக் கொடுக்கின்றார்கள். கள் இறக்கலாகாது என்று தடுத்துவிட்டால், தடையையும் தருமத்தையும் மீறி நடக்கும் இந்தியனும் இருப்பானா? அரசாங்கத்தைப் போற்றவேண்டும் என்று அறநூலில் எங்கோ கூறப்பட்டிருக்கிறது என்று தவறாக பொது ஜனங்களின் மனத்தில் பதிந்து கிடக்கின்றது. அதனாலேதான், அதிகார வர்க்கத்தினரின் பொறுப்பற்ற தன்மையையும் பொது ஜனங்கள் சகித்து வருகின்றார்கள். இராஜபக்தி வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்ற போலித்தத்துவத்தை, எந்த சந்தர்ப்பத்தை யொட்டியோ, ஒருவன் ஒரு காலத்தில் உளறிவிட்டுப் போனதன் பயனாக, இந்திய அதிகார வருக்கத்தினர் இந்த நாட்டில் தங்கள் மனம்போன போக்கெல்லாம் போகின்றார்கள். அந்தத் தத்துவம் பொய் அல்லது குறைகொண்டது என்று கண்ட ஒத்துழையாமைக் காலத்தில், இந்திய அதிகார வருக்கத்தினர் நடத்தும் பொறுப்பற்ற ஆட்சி ஆட்டம் கொடுக்கவில்லையா? எனவே, அதிகார வருக்கத்தினர் தங்கள் குறைகொண்ட வாதமுறையைக் கொண்டு, இந்தியர்களின் பொறுமையைச் சோதிப்பது அவர்களுக்கும் இந்தியர்களுக்கும் அழகாகாது.

"பூரண மதுவிலக்கு யோசனையை ஏற்று, அதை அமுலுக்குக் கொண்டு வந்து, பயன்படாமல் போயின், இந்தத் துறையில் எதிர்காலத்தில் செய்யும் முயற்சிகளுக்கு ஆபத்து வரும்" என்று அரசாங்கத்தார் தங்கள் உத்தரவில், தேசபக்தர்களுக்கு அச்சங்காட்டுகின்றார்கள். அரசாங்கத்தார் தீர்க்கதரிசிகள் அல்ல. முயற்சி பயன்படாது என்ற முடிவுக்குவர அவர்கள் எத்தகைய ஏதுக்களைக் கண்டார்கள்? தவிர, தோல்வியைக் கண்டு அஞ்சி, உலகத்தார் பின்னும் முயற்சி செய்யாமலிருக்கிறார்களா? அரசாங்க உத்தரவில் காணப்படுவது இயற்கைக்கு மாறாகும். தோல்விதான் வெற்றிக்குத் தூண்டுதல் ஆகும்: "தோல்விகள் வெற்றியின் தூண்கள்" என்ற பேராசிரியரின் மொழிகள் தாம் உண்மை கொண்டவை. பூரண மது விலக்கிலும், ஏனைய உண்மையான, நாட்டுக்கு நலம் பயக்கும் துறைகளிலும் சிறிதும் இறங்க மனமில்லாத இந்திய அதிகார வர்க்கத்தினருடன் வாதம் செய்தல் பயனில்லை. அவர்களின் மனப்போக்கு எவ்வாறிருக்கின்றது என்பதை மட்டும் பொது ஜனங்களுக்கு எடுத்து உரைப்பது நமது கடமையாகும்.

## புதிய கட்சி.

"தமிழ் நாடு தேசிய சங்கம்" என்று புதிய கட்சி யொன்று தமிழ் தேசத்தில் தோன்றியிருக்கிறது. இத்தப்புதிய கட்சி ஸ்ரீமான் வரதராஜுலு நாயுடு அவர்களின் முயற்சியின் பயனாகும். ஸ்ரீமான் நாயுடு அவர்களுக்கு, சுயராஜ்யக்கட்சியும் ஜஸ்டிஸ் கட்சியும் பிடிக்கவில்லை. ஸ்ரீமான் நாயுடு அவர்களைப்போல கருத்துக் கொண்டவர்கள் நாட்டில் ஆயிரக்கணக்கில் இருக்கின்றார்கள். ஆனால் அவர்களில் யாரும் தனிக்கட்சி நிறுவமுயலவில்லை. அவ்வாறு நிறுவத்திறமை அப் பலர்க்குப்போதாதுஎன்று ஸ்ரீமான் நாயுடுவும் ஏனையோரும்கருதமாட்டார்கள்என்று நம்புகின்றோம். அரசியலையும் மதத்தையும் சேர்க்கலாகாது என்று சதா இடித்துக்கூறும் ஸ்ரீமான் நாயுடு, புதிய சங்கத்தில் இவ்விரு சங்கதிகளையும் எவ்வாறு இணைத்தார் என்று நமக்கு விளங்கவில்லை. மதம் வேறு, அரசியல் வேறு என்ற கருத்தை, காந்தி கொண்டவரல்லர். அந்தக் கொள்கையே நமக்கும் உடன்பாடு. அரசியலுக்கும் மதத்துக்கும் தொடர்பு உண்டென்பதை இப்பொழுதுதான் ஸ்ரீமான்நாயுடு அவர்கள் கண்டாரா?

புதிய சங்கத்தின் நோக்கங்கள் பத்து ஆகும். இந்தியாவிலிருக்கும் எல்லா வகுப்பார்களும்—தேசபக்தர்கள் மட்டுமல்ல—நோக்கங்களை விரைவில் ஏற்றுக் கொள்ளுவார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த நோக்கங்களைப்பூர்த்தி செய்ய, சாதனங்கள் வெளிப்படையாகக் காணப்படவில்லை. "கையால் நூற்றல், நெய்தல் போன்ற கிராமத் தொழில்களை ஏற்படுத்தவும், ஆதரிக்கவும், சர்க்கார் உதவி பெற்றோ, பெறாமலோ, ஒவ்வொரு வழியிலும் முயற்சி செய்ய வேண்டும்" என்று ஐந்தாவது நோக்கம் காணப்படுகின்றது. இதைப் பரஸ்பர ஒத்துழைப்பு என்று கண்டு பிடிப்பது அருமையா? மிதவாதிகளும் பரஸ்பர ஒத்துழைப்பாளர்கள் தாம். எனவே ஸ்ரீமான் நாயுடுவின் புதிய கட்சிக்கும் பழைய மிதவாதக் கூட்டத்துக்கும் வேற்றுமையதிகம் இல்லை. நோக்கங்கள், பார்வையிலே, புரட்சித்தன்மை கொண்டு விளங்குகின்றன. தவிர, நோக்கங்கள் யாவும் மாமூலாகவும் மாமூல் சொற்களைத்தாங்கியவைகளாகவுமிருக்கின்றன. நோக்கங்கள் பத்தில், "உடனே நமது நாட்டிலிருந்து போதை வஸ்துக்களை நீக்க முயற்சி செய்வது" என்றதை மட்டும்தான், மறியல் மூலமாக, அமுலுக்குக் கொண்டு வரப்பார்க்கலாம். ஏனைய யாவும் மாமூல் காகிதத் தீர்மானங்கள். ஆனால் புதிய சங்கத்தின் நோக்கங்களில் நமக்கு உடன்பாடு என்பதை நாம் வற்புறுத்திக் கூறுவோம்.

புதிய சங்கம் கண்டதுமட்டும் நமக்கு விளங்கவில்லை. ஸ்ரீமான் சிங்காரவேலு செட்டியார் கூறியிருப்பதைப்போல, "சுதந்திரம் கொண்டு வாழும் நாட்டில், கட்சிகள் கொள்கைகளையும் சக்தியையும் தாங்கி எழுகின்றன. அவைகளுக்குப்பொருளும் பயனுமுண்டு. ஆனால் அடிமை நாட்டில், பல கட்சிகளுக்கு இடமில்லை". காங்கிரஸ், கொள்கையிலும் வேலைத்திட்டத்திலும் முதுகெலும்பு முறியாமல், நிமிர்ந்து நிற்குமளவும், அதற்குப்போட்டியைப் போலக் காணப்படும் எத்தகைய கட்சியும் சங்கமும் தோன்றுவது நாட்டுக்கு நன்மை பயப்பதாகாது. நாட்டின் பொது வாழ்விற்குத்தனிப் பெருங்கோயிலாகவிளங்கும் காங்கிரஸ் உயிருடன் இருக்கையில், பாகவியாச்சியம் போடுவதைப் போல, புதிய சங்கங்கள் தோன்றுவது; நாட்டின் பொதுவல்லமையை வளர்க்காது. ஒத்துழையாமை இயக்கத்துக்கு காங்கிரசின் அனுமதி வேண்டும் என்று தீர்மானங் கொண்ட காந்தியின் மனப்பான்மை நாட்டிலே பரவுமாகில், கட்சிகள் மலியுமா? நாட்டாரும் அன்னியர்களின் அவமதிப்புக்கு ஆளாவார்களா? புதிய கட்சியையும் வேலைத்திட்டத்தையும் காணுவது எளிது; ஆனால் பழையஒத்துழையாமை வேலைத்திட்டத்துக்கு தொண்டர்கள் கிடைப்பதில்லை, என்ன விநோதம்!

## இடிமுழக்கம்.

### பெற்றவள் அறிவாள்.

கதர் தமது மூச்சுக்காற்று என்றும் ராட்டை தமது ஜீவநாடியை உணர்த்தும் கருவியென்றும் மகாத்மா கூறிவருவது யாவருக்கும் தெரிந்த விஷயமாகும். என்றாலும், இதற்குச் செவி சாய்க்காதவர்கள் பலர். இதை ஏளனம் செய்தவர்கள் பெரும்பாலர். இந்தியர்கள் யாவரும் உடுத்துவதற்கு, "கதர்த் துணி மட்டும் போதுமானதல்ல, மில்துணியும் தேவை" என்று பாவனைச் செல்வநிலைத் தத்துவம் கூறியவர்கள் எத்தனை பேர்களோ! ஆனால் பெற்றவளுக்குத்தான் பிள்ளையின் அருமை தெரியும். சுதேச சமஸ்தானதிபதிகள் இந்தியர்கள் தாம் என்ற உணர்ச்சி பெறவில்லையே என்று பலர் ஏங்கி வருந்தின காலமுண்டு. ஆனால், அவர்களுக்கும் நல்லுணர்வு ஏற்பட்டு வருகின்றதைக் காண்கின்றோம். மைசூர் சமஸ்தானத்தில், கதரைத் தொழிற்கல்வியாகவும் குடிசைத்தொழிலாகவும் பரப்பவேண்டும் என்று மேற்கூறிய அரசாங்கத்தார் தீர்மானித்துள்ளார்கள் என்பது அந்த அரசியல் நிர்வாக சபையின் தலைமை அங்கத்தினர் திரு. சண்டி அவர்களின் சொற்பொழிவினின்றும் இனிது விளங்குகின்றது. சுதேச மன்னர்கள், தாயைப்போல உணர்ச்சி பெற்று, ராட்டையைப் போற்றுவார்களாகில், கதர்க் குழந்தை வலிமைதாங்கிய உயிர்த்தன்மையைக் கொண்டு வளரும் என்று கூறுவதில் என்ன தடையிருக்கிறது? மைசூர் சமஸ்தானத்தின் அடிச்சுவடுபற்றி, ஏனைய சமஸ்தானங்களும், ஜமீன்தாரிகளும் கதர்த்தொண்டில் ஈடுபடுமா?

### புதிய சீர்திருத்தம்.

இந்திய மந்திரி பர்க்கென்ஹெட் பிரபு வாய்ச்சொல் வீரர். கண்கட்டி ஜாலவித்தை செய்பவர்கள் உலகத்தில் பலர் இருக்கிறார்கள். அதைப்போலவே, சொற்களைப் பொழிந்து, பிறர் மனத்தைக் குழம்பச் செய்து, அதனாலுண்டாகும் இலாபங்களை அனுபவிக்கப் பலர் தயாராயிருக்கிறார்கள். "இந்தியர்கள் சுயராஜ்யத்துக்குத் தகுதியற்றவர்கள்" என்று சதா காலமும் கூறி, இந்தியர்களின் உள்ளத்தை, ஆங்கில ராஜதந்திரிகள் குழப்பிவிட்டார்கள். இப்பொழுதோ, "இந்தியர்கள் ஒத்துழைத்தால், புதிய சீர்திருத்தம் வழங்கப்பெறும்" என்று ஆங்கில அரசியல் வாதிகள் கூறிவருகின்றனர். ஒத்துழைப்பு என்பதன் பொருள் என்ன? இந்தியர்கள் இரட்டையாட்சிச்சீர்திருத்தத்தை ஒப்புக்கொள்ளவேண்டும் என்பதும், இந்தியாவுக்கு சுயராஜ்யம்வழங்க, ஆங்கிலப்பார்லிமெண்டு சபைக்குத்தான் உரிமை உண்டு என்பதும் ஒத்துழைப்பின் பொருளாகும். இதை நண்பர்கள் தெளிவாக அறிந்துகொள்ளவேண்டும். இரட்டையாட்சியின் மூலமாய், இந்தியாவுக்கு சுயராஜ்யம் வராது. ஒரு நாட்டின் தலை எழுத்து வேறு எந்த நாட்டின் கையிலும் இல்லை. எனவே, இந்தியர்கள், இந்திய மந்திரி கோரும் ஒத்துழைப்பை எவ்வாறு நாட முடியும்? எவ்வாறு கைக்கொள்ளலாகும்? மயக்க மருந்து நோயாளிக்குத் தேவை; மயக்கச் சொற்கள் பலவீனர்களுக்குத் தேவை. மற்றவர்களுக்கு வேண்டாம்.

### நல்லதல்ல.

ருஷியாவின் ஸோவியத்து அரசியலை நிர்வகித்து நடத்திவரும் ஸோவியத்துக் கட்சிக்குள் இரண்டு பிளவுகள் ஏற்பட்டிருப்பதாக ஒரு செய்தி கூறுகின்றது. புத்தன் பிறந்ததும், இந்திரன் கொடி அற்று விழுந்தது என்று கதை சொல்லுவதுண்டு. ருஷியாவில், ஸோவியத்து அரசாங்கம் வேரூன்றிய காலமுதல் சாம்ராஜ்யக்கொள்கையைத்தாங்கி நடைபெற்ற நாடுகள், தங்கள் பேரில் இடி விழுந்ததென எண்ணிக் கொண்டு வந்தன. ஸோவியத்துக் கட்சிக்கு விரோதமாக, எதிர்க்கட்சிகளைத் தூண்டிவந்தார்கள், சாம்ராஜ்யக் கொள்கைகொண்ட ஐரோப்பிய ராஜதந்திரிகள். எதிராகத் தோன்றிய கட்சிகள் யாவும் ஸோவியத்துக் கட்சியின் முன் எதிர்த்து நிற்கமுடியாமல், ஒடுங்கிவிட்டன. இந்தத் தோல்வியை மௌனமாய் ஏற்றுக்கொண்டு, சும்மா விருந்து விடுவார்களா? ஸோவியத்துக் கட்சிக்குள் பிளவுகளை உண்டாக்காமலிருந்தால், அவர்களுடைய உயிர் போய்விடாதா? எனவே சூழ்ச்சிகள் பலவற்றைச் செய்து, இரண்டு பிளவுகளை ஸோவியத்துக் கட்சிக்குள் ஐரோப்பிய ராஜதந்திரிகள் உண்டாக்கிவிட்டார்கள்என ஊகிக்க இடமிருக்கிறது. இல்லாவிடின், லெனின் அவர்களுக்குப் பக்கபலமாயிருந்த டிராட்ஸ்கி அவர்கள் ஸோவியத்து அரசியலுக்கு எதிராக வினையாற்றுகின்றார் என்ற செய்தி தோன்றுமா? ஸோவியத்து அரசியல் ஏனையோர்களுக்கு இனிக்காதிருப்பினும், ஸோவியத்துக் கொள்கைகளில் சிலவற்றை ஏற்காமல், இனியும் சாம்ராஜ்யங்கள் உலகில் நிலைபெற முடியுமா? ஆனால் நாற்புறமும், தீ கொழுந்துவிட்டு எரிந்தாலும், மலைப்பாம்பு தனது தூக்கத்தை விட்டு விடுவதில்லை.

### சந்திப்பு.

போர்க்காலத்தில் எதிரிகள் ஒருவரோடு ஒருவர் போர் செய்வார்கள். ஆனால் எல்லாக் காலங்களிலும், இருவர் எதிரிகளாக இருக்க முடியுமா? மனிதர்களுக்கு இத்தகைய விருப்பம் இருப்பினும், இயற்கை அதற்கு இடங்கொடுக்காது. ஜர்மானியர்களும் ஆங்கிலேயர்களும் "பாரத"ப் போர் புரிந்தார்கள். போரில் ஏற்பட்ட பொருட்சேதத்துக்கும் உயிர்ச் சேதத்துக்கும் அளவுகூற முடியாது. ஆங்கிலமும் ஜர்மனியும் பரஸ்பரம் பகைமைக் கண்களுடன் நோக்குவதுதான் கடமையென்றும் தருமம் என்றும் போர்க்காலத்தில் இரு நாட்டார்களும் போதிக்கப்பட்டனர். ஜர்மானியனைக் கண்ட ஆங்கிலேயன் உள்ளம் பொங்கி எழுவான். இவ்வாறு போர்க்காலத்திலும் அதற்குச் சிறிது பின்னரும் நிகழ்ந்தது. ஆனால் நிலைமை இப்பொழுது எவ்வாறிருக்கிறது? ஆங்கில வியாபாரிகளும் ஜர்மானிய வியாபாரிகளும் ஆங்கில நாட்டில் ஓர் இடத்தில் சந்தித்ததாகச் செய்தி கூறுகின்றது. இதன் படிப்பினையை நமது நாட்டார்கள் உணர்வார்களா? உலகப் போக்கின் தேவையை உணர்ந்து, இரு நாடுகளும் உறவுகொள்ள வேண்டும் என்ற நிலைக்கு அவர்கள் வந்துவிட்டார்கள். சீர்குலைந்து நிற்கும் ஜர்மனி முன் செல்லாவிடில் தங்கள் நாடும் வீழ்ச்சியடையும் என்பதை ஆங்கிலேயர்கள் உணர்ந்துவிட்டார்கள். உலகப்போக்கின் தேவையை உணராவிட்டாலும், நாட்டின் தேவையை உணர்ந்தாயினும், நமது நாட்டிலுள்ளவர்கள் வேற்றுமைப் புத்தியைத் துறந்து, வினையாற்ற முற்படலாகாதா? நமது ஒற்றுமைக் குறைவு விதியா அல்லது விகற்ப புத்தியின் விளைவா?

### சாம்ராஜ்ய மகாநாடு.

விராட மன்னனுடைய பசுக்களை ஓட்டிச்சென்ற கௌரவர்களை போர்க்களத்தில் முறியடித்து, பசுக்களை மீட்டவன் அருச்சுனன். பாண்டவர்கள் அந்தக்காலத்தில் மறைவேடம் பூண்டு,விராடநகரில்வசித்துவந்தார்கள். மறைவேடம்பூண்ட தரும புத்திரனும், விராட மன்னனும் சதுரங்கம் ஆடிக்கொண்டிருந்தார்கள். கௌரவர்களை வென்றது தமது மகன் உத்தரன் என்று அகமகிழ்ந்தான் விராட மன்னன். உத்தரனல்லவென்று தரும புத்திரன் (அப்பொழுது அவருக்கு கங்காபட்டன் என்று பெயர்) மறுத்துக் கூறினர். பிறனுக்குப் பிறந்த குழந்தையைத் தனது என்று நினைத்து ஏமாந்துபோய் உச்சி மோரும் ஒருவனைப்போல, விராடமன்னன் நடந்துகொண்டான் என்று வில்லிபுத்தூரார் மிகவும் அழகாகத் தமது பாரதத்தில் பாடியுள்ளார். லண்டன் நகரில், ஆங்கில சாம்ராஜ்யத்துக்குட்பட்ட நாடுகளின் முதல் மந்திரிகள் மகாநாடு கூடியிருக்கிறார்கள். இதற்கு சாம்ராஜ்ய மகாநாடு என்று பெயர். இந்த மகாநாட்டுக்கு இந்தியப் பிரதிநிதிகளும் சென்றிருக்கிறார்கள். ஆனால்,இவர்கள் செல்லுவதற்குக் காரணம் நமக்குத் தெரியவில்லை. ஒப்பற்ற சாம்ராஜ்யத்தைப் படைத்து ஆளுபவர்கள் ஆங்கிலேயர்கள். அந்த சாம்ராஜ்யத்துக்குள் இந்தியர்கள் அடிமைகளாக வாழ்கின்றார்கள். சாம்ராஜ்யத்துக்கும் இந்தியர்களுக்கும் என்ன சம்பந்தம்? விராட மன்னனைப்போல, பிறர் குழந்தையைத் தங்களுடையது என்று மதிமயங்கி, இந்தியர்கள் இழிவை அடைய வேண்டுமா?

### சீனக்குழப்பம்.

௧௯௧௧-ம் ஆண்டின் துவக்க முதல், சீனதேசம் ஐரோப்பிய வல்லரசுகளின் கைகளில் சிக்கிக்கொண்டு, தவித்து வருகின்றது. சீனாவின் ஜனத்தொகை நாற்பது கோடிகளுக்கு அதிகமாயுள்ளது. சீனாவில் வகுப்பு வேற்றுமைகளும் ஜாதிச் சண்டைகளும் அறவே இல்லை, வகுப்பு வேற்றுமையும் ஜனத்தொகைக் குறைவும் சிறிதுமில்லாத சீன தேசம் வல்லரசுகளின் சூழ்ச்சி வலைக்குள் அகப்பட்டுக்கொண்டு தவித்து நிற்கின்றது. சீனாவுக்குப் பக்கத்திலிருக்கும் ஜப்பான் நாட்டின் ஜனத்தொகை ஆறு கோடிக்கு அதிகமில்லை. என்றாலும் உலக வல்லரசுகளில் ஒன்றாக, ஜப்பான் கருதப்பட்டு வருகின்றது. இந்த இரண்டு நிகழ்ச்சிகளின் காரணங்களை அறியாமல், உரையாடும் பலர் நமது நாட்டில் வசிக்கின்றார்கள். சீனக் குழப்பத்துக்குக் காரணம் என்னவெனில், திடன்கொண்ட தேசபக்தியும் கட்டுப்பாட்டுக்கு இணங்கிய வாழ்க்கையும் சமூக அமைப்பும் இல்லாமைதான். மரத்தில் ஏறுவதற்கு, ஒருவனுக்குத் தைரியமிருக்கலாம். ஆனால் நாட்டைக் காப்பதற்கு, வேறு வகைத் தைரியம் வேண்டும். இந்த இருவகைத் தைரியங்களும் ஒரே பழக்கத்தின் பயனல்ல. சொந்த நாடு அன்னியரின் ஆளுகைக்குட்பட்டிருத்தல் கூடாது என்ற ஒரு உணர்ச்சி போதாதா? அதற்காக ஆன்மா, புனர் ஜன்மம், கடவுள், பசு, பதி, பாசம் முதலிய சொற்களையும் அச்சொற்கள் குறிக்கும் தத்துவத்தையும் சந்திக்கு இழுக்க வேண்டுமா? சீனக் குழப்பத்திலிருந்து, நமது நாட்டார், நல்ல சரியான முடிவைக்கொள்ள வேண்டும்.

### மகிழ்ச்சி.

உலகத்தில் பற்பல நாடுகளில் வசிப்பவர்கள் தீரமான செயல்களைச்செய்வதைப் பார்ப்பின், கேட்பின், நமக்கு வருத்தமும் சிறிது பொறுமையும் உண்டாவதுண்டு. ஸர் ஆலன் கோபாம் ஆஸ்திரேலியாவுக்கு ஆகாய விமானத்தில் பறந்து சென்றபொழுது, "இந்தியன் எவனாவது இவ்வாறு செய்திருக்கலாகாதா" என்று எண்ணி எண்ணி, நாம் வருந்தினதுண்டு. காப்டன் அமுண்ட்ஸன் அவர்கள் வட துருவத்தைக் காண, கப்பலும் ஏனைய கருவிகளும் தயார் செய்து

## இரண்டாம் பாகம்.

அத்தியாயம். ௨௨.

சமூகத்தொண்டில் முழுதும் ஈடுபட்டு, நான் வாழ்ந்து வந்தால், ஆன்மாவைக்காண வேண்டும் என்ற எனது விருப்பம்தான் அதற்குக்காரணமாகும். தொண்டு செய்யும் சமயத்தை நான் எனதாக்கிக் கொண்டேன். ஏனெனில், கருமயோகத்தின் மூலமாய்த்தான் கடவுளைக் காணமுடியும் என்ற உணர்ச்சி என்னிடம் பதிந்திருந்தது. தொண்டு என்பதை இந்தியாவுக்குத் தொண்டு என்று கொண்டேன். ஏனெனில், அது நான் நாடாமலே என்னிடம் வந்து சேர்ந்து கொண்டது. தவிர, அதற்கான உருசியும் தகுதியும் என்னிடமிருந்தது. பிரயாணத்தைக் கருதியும், கத்தியவாட் சூழ்ச்சிகளினின்று தப்பிக்கும் பொருட்டு, ஜீவனோபாயத்தை நாடியும், நான் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றேன். ஆனால், நான் கூறியது போல, கடவுளைக் காணுவதிலும், ஆத்மானுபூதிச்சோதனையில் பக்குவம் பெறுவதிலும் ஈடுபட்டுப்போனேன்.

அறிவினிடம் எனக்கிருந்த பசியை கிருஸ்தவ நண்பர்கள் மிகுதியும் கூர்மைப்படுத்திவிட்டார்கள். அதைத்திருப்தி செய்ய முடியாது போலத் தோன்றிவிட்டது. நான் கவலையில்லாமல் இருக்க விரும்பினாலும், அவர்கள் அமைதியுடன் இருக்க என்னைவிடவில்லை. டர்பனில் தென்னாப்பிரிக்காப் பொது மிஷன் தலைவரான திரு ஸ்பென்ஸர் வால்டன் அவர்கள் என்னைக் கண்டுகொண்டார். நான் அவருடைய குடும்பத்தின் உறுப்பினனைப்போல, அநேகமாய் ஆகிவிட்டேன். இந்த நட்பைத் தவிர, பிரிட்டோரியாவிலிருக்கும் கிருஸ்தவர்களுடன் நான் பழகிவந்தேன். திரு வால்டன் அவர்களுடைய நடையோ தனித்தன்மை கொண்டதாகும். கிருஸ்தவ மதத்தில் என்னைச் சேரும்படி அவர் எப்பொழுதேனும் அழைத்ததாக எனக்கு நினைவே இல்லை. ஆனால் அவருடைய வாழ்வை என் கண்களுக்குமுன், திறந்த நூலாக இருந்தது.

# காந்தியடிகளின் சரிதம்.

## சமய ஆராய்ச்சி.

காந்தியடிகள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

அவருடைய நடையுடைபாவனை அனைத்தையும் நான் கவனிக்கக்கூடிய நிலையில் என்னை வைத்துவிட்டார். திரு. வால்டனின் மனைவியார் சாந்தமானவள், சாமர்த்தியசாலி. இந்த தம்பதிகளின் மனோநிலைமையை மிகுதியும் நான் விரும்பினேன். எங்களுக்குள் இடையே இருக்கும் அடிப்படை வேற்றுமைகள் எங்களுக்குத் தெரியும். எவ்வளவு வாதம் செய்தாலும் அவைகள் மறையமாட்டா. பொறுமையும், தயையும், உண்மையும் எங்கு இருக்கப்பெறுகின்றதோ, அங்கு வேற்றுமைகள் (முற்போக்குக்குப் பெரிதும்) உதவுகின்றன. வால்டன் தம்பதிகளின் அடக்கத்தையும், விடாமுயற்சியையும், வேலைப்பற்றையும் கண்டு மகிழ்ந்தேன். நாங்கள் அடிக்கடி சந்திப்போம்.

மதத்தில் எனக்கிருந்த ஊக்கத்தை இந்த நட்பு பெரிதும் வளர்த்தது. சமய ஆராய்ச்சிக்கு பிரிட்டோரியாயில் எனக்கிருந்த ஓய்வு இப்பொழுது கிடைப்பது அசாத்தியமாகி விட்டது. ஆனால் கிடைத்த சிறிதளவு ஓய்வை நல்ல முறையில் செலவிட்டேன்; சமய சம்பந்தமான எனது கடிதப் போக்குவரத்துத் தொடர்ந்து கொண்டு வந்தது. ரெய்ச்சந்த்பாய் எனக்கு வழிகாட்டிக்கொண்டு சென்றார். நர்மதா சங்கரின் நூலாகிய 'தர்ம விசார்' என்ற புத்தகத்தை யாரோ ஒரு நண்பர் எனக்கு அனுப்பிவைத்தார். அதன் முகவுரை எனக்குப் பெரிதும் பயன்பட்டது. கவியின் "நாடோடி" வாழ்வைப்பற்றி, நான் கேள்விப்பட்டிருந்தேன். சமய நூல்களைப் படித்ததால், அவருடைய வாழ்வில்ஏற்பட்ட புரட்சியைப்பற்றி அவர் முகவுரையில் வருணித்து, எழுதியிருந்தது என்னை மிகுதியும் கவர்ந்தது. புத்தகத்தில் ஆழ்ந்து போனேன். முதல் அட்டையிலிருந்து கடைசி அட்டைவரைக்கும் ஊன்றிப்படித்தேன். "இந்தியா—அது நமக்கு என்ன கற்றுக்கொடுக்கும்" என்று மாக்ஸ்மூலர் அவர்கள் எழுதிய நூலை சிரத்தையுடன் படித்தேன். பிரம்மஞான சபையாரால் பிரசுரிக்கப்பெற்ற உபநிஷதத்தின் மொழி பெயர்ப்பையும் படித்தேன். இவைகளினால் எனக்கு இந்து மதத்தில் இருந்த மதிப்பு வளரப்பெற்றது. இந்து மதத்தின் அழகுகளைச் சிறிது சிறிதாகக் கண்டுகொண்டேன். ஆனால், இத்தகைய படிப்பினால் வேற்று சமயங்களை வெறுப்புடன் நான் நோக்கவில்லை. "முகம்மதுவும் அவரது சீடர்களும்" என்று வாஷிங்டன் இர்விங் எழுதிய நூலையும், நபியைப்பற்றி கார்லைல் எழுதிய புகழுரையையும் படித்தேன். இந்த நூல்களினால், முகம்மது நபியை பெரிதும் மதிக்கத் துவக்கினேன். "ஜாரதுஷ்ட்ராவின் கூற்றுகள்" என்ற நூலையும் படித்தேன்.

இவ்வாறு வெவ்வேறு சமயங்களைப்பற்றி விரிவான அறிவைப் பெற்றேன். இந்தப் படிப்பு எனது 'உள் நோக்கும்' பழக்கத்தைத் தூண்டிற்று. தவிர, நான் படித்தவைகளில் எவைகளை எனது உள்ளம் ஏற்றதோ, அவைகளை வழக்கத்தில் கொண்டு வரும் பழக்கமும் என்னிடம் உண்டாயிற்று.

இந்நூல்களைப் படித்து அறிவதினின்றும் ஏற்பட்ட பழக்கத்தினால் சில யோகசாதனங்களைக் கைக்கொண்டேன். ஆனால், இந்த வழியில் வெகு தூரம் செல்ல முடியவில்லை. இந்தியாவுக்குத் திரும்பிவந்து ஒரு நிபுணரின் உதவியைக் கொண்டு, அவைகளை அனுஷ்டிக்கலாம் என்று தீர்மானம் கொண்டேன். ஆனால், இந்த ஆசை பூர்த்தியாகவில்லை.

டால்ஸ்டாயின் நூல்களைமிகவும் ஊன்றிப் படித்தேன். "வேதம் சுருக்கமாக," "என்ன செய்வது" என்ற நூல்களும் பிறவும் என் உள்ளத்தை மிகுதியும் கவர்ந்தன. எல்லையற்ற அன்பின் குறைவற்ற சக்தியை மேன் மேலும் உணரத்துவக்கினேன்.

இதே சமயத்தில் வேறொரு கிருஸ்தவக் குடும்பத்தோடு நெருங்கிப் பழகினேன். அவர்களுடைய யோசனைக்கிணங்க, ஞாயிறு தோறும் வெஸ்லியன் மாதா கோவிலுக்குச் சென்றேன். அந்த நாட்களில் நான் அவர்களுடன் கூட உடன் உண்ண வேண்டும் என்ற அழைப்பையும் சாசுவதமாக என்னிடம் வைத்திருந்தார்கள். அந்த மாதா கோவில், என் உள்ளத்தில் நல்ல உணர்ச்சியை உண்டாக்கவில்லை. கூடியிருப்பவர்களும் மதப்பற்றுக் கொண்டவர்களாக எனக்குத் தோன்றவில்லை. அது பக்தர்களின் திருக்கூட்டமல்ல. விளையாட்டுக்காகவும் வழக்கத்தை ஒட்டியும் கோயிலுக்குப் போகும் மனிதர்கள் அவர்கள் எனத் தோன்றிற்று. சில சமயங்களில் இங்கு நான் அறியாமலே தூங்கிவிடுவேன். நான் வெட்கப்பட்டேன். ஆனால் என்னைப் போல, பக்கத்தில் தூங்குவோர்களைக் கண்டு, என்னுடைய வெட்கம் சிறிது குறைந்தது. இவ்வாறு தொடர்ந்துகொண்டு போக எனக்கு விருப்பமில்லை. எனவே மாதா கோவிலுக்குப் போவதை நிறுத்திக் கொண்டேன்.

ஞாயிறுதோறும் நான் சென்று கொண்டு வந்த குடும்பத்தின் உறவு பட்டெனத் தெரித்து விட்டது. அங்கு வரலாகாது என்று நான் எச்சரிக்கப்பட்டதாகவே கூறலாம். அது பின் வருமாறு நேர்ந்தது. எனக்கு விருந்து அளிக்கும் பெண்மணி நல்லவள்; கபடமற்றவள்; ஆனால் குறுகிய நோக்கம் கொண்டவள். எப்பொழுதும் நாங்கள் சமயவாதம செய்வதுண்டு. ஆர்னால்ட் அவர்கள் எழுதிய "ஆசியாவின் ஒளி" என்ற நூலை நான் மீண்டும் படித்துக்கொண்டிருந்தேன். ஏசுவின் வாழ்வை புத்தன் வாழ்வோடு நாங்கள் ஒத்துநோக்க, ஒரு சமயம் நேர்ந்தது. "கௌதமனுடைய கருணையைப்பாருங்கள். அது மனிதவர்க்கத்துடன் நின்று விடவில்லை. உயிர்க்குலம் யாவையும் அது தழுவி நின்றது. ஆட்டுக்குட்டி அவருடைய தோளில் துள்ளி உட்கார்ந்ததை நினைக்க, எவருடைய உள்ளத்தில் தான் அன்பு சுரக்காது? ஏசுவின் வாழ்வில் இத்தகைய கருணையை எவரும் காணமுடியாது" என்றேன். இவ்வாறு ஒப்பிட்டுப் பேசியது அந்தப் பெண்மணிக்குத் துன்பம் உண்டாக்கிற்று. அவளுடைய உணர்ச்சியை நான் அறியக்கூடும். விஷயத்தைச் சுருக்கிக் கொண்டேன். நாங்கள் சாப்பாட்டறைக்குச் சென்றோம். ஐந்துவயதுக்கு அதிகம் இராத, அவளுடைய பையன் எங்களுடன் இருந்தான். குழந்தைகளின் நடுவில் இருக்கையில், என்னுடைய மகிழ்ச்சிக்கு எல்லை கிடையாது. இந்தப் பையனும் நானும் வெகுகாலத்திய நண்பர்கள். அவன் வட்டியிலிருந்த மாமிசத் துண்டை இகழ்ந்தும், என் வட்டியிலிருந்த இலந்தைப்பழத்தைப் புகழ்ந்தும் பேசினேன். பையன் என் சொற்களால் ஈர்க்கப்பட்டான். அவனும் பழத்தைப் புகழ்ந்து பேச, என்னுடன் சேர்ந்துகொண்டான்.

ஆனால், தாயாரோ? அவள் திகைத்துப் போனாள்.

நான் எச்சரிக்கை செய்யப்பட்டேன். என்னை அடக்கிக்கொண்டு, சம்பாஷணையை மாற்றினேன்; அடுத்தவாரம் வழக்கப்படி, அந்தக் குடும்பத்தைச் சந்திக்கச்சென்றேன்—ஆனால், அச்சத்துடன்தான். நான் அங்கு போவதை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்பதைக் காணவில்லை; போவது சரியல்லவென்றும் எனக்குத் தோன்றவில்லை. ஆனால், எனது போக்கை வீட்டுக்காரி எளிதாக்கிவிட்டாள்.

அவள் கூறியதாவது :—"காந்தியவர்களே! தங்களுடைய சேர்க்கையால் எனது பையன் மேன்மையடையவில்லை. ஒவ்வொருநாளும் மாமிசம் உண்ண அவன் தயங்கி, பழங்கேட்டு, உங்களுடைய வாதத்தை எனக்கு நினைவுறுத்துகின்றான். இது மீறிப்போன சங்கதி. மாமிசத்தை அவன் விட்டுவிட்டால், அவன் நோயாளியாக ஆகாவிட்டாலும், பலவீனனாவான். அதை என்னால் எவ்வாறு பொறுக்கமுடியும்? இனி நீங்கள் முதியவர்களாகிய எங்களுடன் தான் பேசவேண்டும். குழந்தைகள் கெட்டுப்போவார்கள்."

"நான் வருந்துகின்றேன். பெற்றோர் என்ற முறையில், தங்களுடைய உணர்ச்சிகளைநான் அறிவேன். எனக்கும் குழந்தைகள் இருக்கின்றன. இந்த அசம்பாவித நிலையை எளிதிலே மாற்றிக்கொள்ளலாம். நான் எதை உண்கிறேன், எதை உண்ண மறுக்கின்றேன் என்பதுதான் குழந்தையின் உள்ளத்தில் பதியும். எனவே, நான் இனி இங்கு வராமலிருப்பதுதான் உத்தம கருமமாகும். இதனால் நம்முடைய நட்புக்கு பாதகம் வரவேண்டாம்" என்றேன்.

பெருமூச்சுவிட்டுக்கொண்டு, "வந்தனம்" என்றாள்.

---

## அகில இந்திய நூற்பவர் சங்கம்.

மகாத்மா எழுதியது.

இந்த மாதத்தின் இறுதியில், அகில இந்திய நூற்பவர் சங்கத்தின் முதலாவது ஆண்டு பூர்த்தியடைகின்றது. தாங்கள் சங்கத்தின் அங்கத்தினர்கள் என்று கருதப்பட வேண்டுமானால், நடை முதல் ஆண்டுக்கு நூல் சந்தா பாக்கியைப் பூர்த்தி செய்து, அனுப்பித்தரவேண்டும். அடுத்த ஆண்டுக்குத் தங்கள் சந்தாவைப் புதுப்பிக்க எண்ணுபவர்கள், சந்தாவை அனுப்பி வைக்க முந்திக்கொள்ளவேண்டும்.

நன்றாக முறுக்கேறின நூலை அனுப்ப வேண்டும் என்பதை எவ்வளவு அழுத்தமாகக் கூற எண்ணினாலும், அது போதுமானதாகாது. அனுப்பி வைத்த நூலைப் பரிசோதகர்கள், கடுமையில்லாமல், தயவாகச் சோதித்து வருகின்றார்கள். ஆனால் இத்தகைய தயை எப்பொழுதும் காண்பிக்க முடியாது. அது நாட்டுக்கும் நூற்பவர்களுக்கும் கேட்டை உண்டாக்கும். இது முதற்கொண்டு கெட்ட நூல் தள்ளுபடி செய்யப்பெற்றால், நூற்பவர்கள் வியப்படையலாகாது. செல்லாப்பணம் தள்ளுபடியாவதைப்போல, கெட்ட நூலும் தள்ளுபடி செய்யப் பெறும். சங்கம் நிலைபெற்ற ஐந்தாம் ஆண்டின் முடிவில், சங்கத்தின் அமைப்பு விதிகள் மாற்றப் பெறும் உரிமைகளை அங்கத்தினர்கள் வேண்டுவார்களாகில், விடாமல் ஐந்து ஆண்டுகள் அவர்கள் உறுப்பினர்களாக இருந்தார்கள் என்றதை அவர்கள்காண்பிப்பதவசியமாகும்.

---

பிரயாணத்துக்குப் புறப்படுகையில் மகிழ்ச்சியும் வருத்தமும் கலந்து தோன்றின. இயற்கையின்பேரில் மனிதன் வெற்றிபெற முயலுகின்றான் என்பதைக் காண, மகிழ்ச்சி உண்டாயிற்று. வெற்றி பெற முயன்றவன் இந்தியனாயிருக்கவில்லையே என்பதில் நமக்கு உண்டான வருத்தம் மிகுதியானதுதான். எல்லோரும் ஒவ்வொன்றை உலர்த்தினால், எலி தன் வாலையாவது உலர்த்த வேண்டாமா? உள்ளத்தில் மகிழ்ச்சி தோன்றி, எழுச்சி ஏற்படாத வரையிலும், எந்த நாட்டாரும் முன்னேறி வர முடியாது. தீரச் செயல்களைக் காணின், நாட்டாரின் உள்ளம் குதித்து எழும். பம்பாய் நகரிலிருந்து தாவார் என்ற பார்ஸி ஒருவர், துவி சக்கர வண்டி மூலமாய் உலகச் சுற்றுப் பிரயாணம் செய்து வருவதாயும் தமது வண்டியின் மூலமாய் ஸகாராப் பாலைவனத்தைக் கடந்து, ௧௨௫௦௦ மைல் சென்றுவிட்டதாகவும் ஒரு செய்தி கூறுகின்றது. இது நமக்குப் பெரு மகிழ்ச்சியை அளிக்கின்றது. ஏனெனின் ஸகாரா பாலைவனத்தில் குடி நீர் கிடைப்பது அருமை. சுற்றுப்பக்கத்தில் ஆயிரம் மைல்களைப் பார்ப்பினும், நீர் கிடைக்காது. இத்தகைய பாலைவனத்தை, துவிசக்கர வண்டி மூலமாய்—மோட்டார் வண்டியல்ல—கடந்த நமது இந்திய வீரனை நாம் பெரிதும் போற்றுகின்றோம்.

---



## வெளி நாடு.

ரங்கூனில் சர்க்கார் பணத்தைக் கையாடினதாக வி. இ. எப். மான்ஸன் என்ற ஆங்கிலேயர் ஸப்டிவிஷனல் மாஜிஸ்திரேட்டால் ஐந்துமாதக் கடுங்காவல் விதிக்கப்பட்டார் என்று தெரிகிறது.

* * *

ஸ்லெஸ்விக்கு டென்மார்க்குக்கு அளிக்கப்பட்டதுமுதல், அங்குள்ள குடியானவர்கள் பொருளாதார நெருக்கடியால் கஷ்டப்பட்டதால், சுயஆட்சி இயக்கம் ஒன்று அவர்கள் தொடங்கியிருக்கிறார்களாம்.

* * *

ஜர்மானியத் தொழில் நிபுணர்களும், ஆங்கிலத்தொழில் நிபுணர்களும், ஐரோப்பியத் தொழில்களை நன்னிலைக்குக் கொண்டு வருவதற்காக, ஆங்கில நாட்டில் மகாநாடு கூடி, ஆராய்ச்சிகள் புரிவதற்காக ஒரு நிரந்தரக் கூட்டுக்கமிட்டியை அமைத்துள்ளார்களாம்.

* * *

ஜப்பான் ஓஸாகோவின் செய்தியொன்று, அங்கு விசாரித்ததில் பம்பாய் ஆலைகளிற் சிலவற்றை ஜப்பானிய வியாபாரிகள் சங்கம் வாங்கியதாய்ச் சொல்லப்பட்ட விஷயம் பற்றி ஒன்றும் தெரியவில்லை என்று கூறுகிறது.

* * *

ஜர்மன் பார்லிமெண்டில் மாஜி அரசர் சொத்தைப்பற்றிய ஏற்பாட்டைக் குறித்த மசோதா ஆலோசனைக்கு வந்தபொழுது, பலத்த குழப்பமும் அடிதடியும் நேரிட்டு, மசோதாவை முடிவு செய்யாமலே கூட்டம் கலைந்ததாம்.

* * *

டாஞ்சியர் விதியை மாற்றுவதுபற்றி பிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் நடந்துவரும் ராஜிப்பேச்சு முக்கிய நிலைமையை அடைந்திருக்கிறதாம். பிரிட்டனும் கூப்பிடப்படுமாம். மூன்றும் சேர்ந்ததும், இதாலியும் அழைக்கப்படுமாம்.

* * *

பிரான்ஸில் சண்டை செய்த இந்தியத் துருப்புகளுக்கு நூவிசாபல்லி என்னுமிடத்தில் ஞாபகார்த்தம் அமைக்கும் வேலை ஏற்கனவே தொடங்கப்பெற்றுநடைபெற்று வருகிறதாம். அடுத்த வசந்த காலத்திற்குள் முடிந்துவிடும் எனப்படுகிறது.

* * *

துன்மார்க்க வியாதிகளை யறிந்து கிச்சிசை செய்தல் சம்பந்தமாக இந்திய மாகாண அதிகாரிகளைக் கலந்து ஆலோசிப்பதற்காக, பிரிட்டிஷ் சமுதாய சுகாதாரச்சபைக் காரியதரிசியான மிஸஸ் நெவில்லி ரால்பு என்ற பெண்மணியும், டேவிட் லீஸ் என்பவரும் இந்தியாவுக்குப் புறப்பட்டார்கள்.

* * *

சீன நிலைமை திருந்தி வருகிறதாம். ஷெஞுவன் பகிஷ்காரம் தீர்ந்ததாம். ஆனாலும், இப்பொழுதிருக்கும் நிலையற்ற அரசியல் நிலைமையில், இது நீடித்திருக்குமா என்று தீர்மானமாய்ச் சொல்ல முடியாதாம். ஷெஞுவனிலுள்ள பிரிட்டிஷாரது சுதந்தரத்தைப் பெறவும், அவர் உடைமைகளைக் காப்பாற்றவும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தீர்மானித்துள்ளார்களாம்.

* * *

திரு பாட்டர்சன் பர்மிய அரசாங்கத்தாருக்குச் சிறைச்சாலைச் சீர்திருத்தங்களைப்பற்றிச் செய்திருக்கும் சிபார்சுகளில், குற்றம் செய்யத் தூண்டும் சந்தர்ப்பங்களில் உள்ள ௧௬ வயதுக் குட்பட்ட குழந்தைகளை நீதிஸ்தலத்தார் அனுப்பக்கூடியதான, குற்றங்களைத் தடுக்கக்கூடும் பள்ளிக்கூடங்களை அமைக்க, யோசனை கூறியிருக்கிறார்.

* * *

இங்கிலாந்து நிலக்கரித் தொழிலாளர் தகராறு இன்னும் தீரவில்லை. பின்னும் ஆயிரக்கணக்கான தொழிலாளர் வேலைக்குத் திரும்பிவிட்டார்களாம். தொழிலாளர் மகாநாட்டில், திரு ராம்சே மாக்டொனால்டு, நிலக்கரித் தொழிலைத் தேசீயமாக்கும் கொள்கையில் காமன்ஸ் சபையில் இச்சண்டையை நடத்துவதுதான் தாங்கள் இப்பொழுது செய்யக்கூடியது என்று கூறியிருக்கிறார்.

## தாய் நாடு.

அலகாபாத்தில் தண்டப்போலீஸ் நியமிக்கப்பட்டிருக்கிறதாம்.

* * *

விவசாயகமிஷன் இந்தியா வந்து சேர்ந்து சிம்லாவில் உத்தியோகஸ்தர்களின் சாக்ஷியங்களை விசாரித்து வருகிறது.

* * *

இந்தியத்தொழில், வியாபார மகாநாடு ஒன்று டிஸம்பர்-௴ ௩௦, ௩௧ தேதிகளிலும், ஜனவரி-௴ ௧-உ-யிலும் கல்கத்தாவில் கூடுமாம்.

* * *

தென்னாப்பிரிக்க இந்தியப் பிரசினையைப்பற்றி வாதிக்கத் தென்னாப்பிரிக்காவில் கூடும் மகாநாடு டிஸம்பர்-௴ ௨௦-உ கேப் நகரத்தில் கூடுமாம்.

* * *

விதவா விவாகச் சங்கத்தார் இவ்வாண்டு ஜனவரி-௴ ௧-உ முதல் செப்டம்பர்-௴ ௩௦-உ வரையில் முடித்த விதவா விவாகங்கள் ௨௨௦௪.

* * *

பி. என். இருப்புப்பாதையில் உடைப்பு ஏற்பட்ட ஜோஷில்லா ஆற்றில் புதிய பாலம் ஒன்று கட்டி, ரயில் வண்டிப் போக்கு வரத்துத் தொடங்கப்பெற்றதாம்.

* * *

பம்பாய்க் கடல் தூர்க்கும் விசாரணைக் கமிட்டியாரது இடைக்கால அறிக்கையில் கண்டுள்ள சிபார்சுப்படி வேலை செய்ய, அபிவிருத்தி இலாகாதார் தயார் செய்து கொண்டிருக்கிறார்களாம்.

* * *

தென்னாப்பிரிக்கப் பிரதிநிதிக்கூட்டத்தார் இங்கு மூன்று வாரங்களுக்குமேல் சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டு, அக்டோபர் மாதம் ௧௫-உ பம்பாயை விட்டு, தென்னாப்பிரிக்காவுக்குக் கப்பலில் புறப்பட்டார்கள்.

* * *

பஞ்சு வியாபாரத்தில் தொடர்ச்சியாக வீழ்ச்சி ஏற்பட்டது காரணமாக, பம்பாயில் கில்வி சந்து ஆலையை நவம்பர் மாதம் முதல் தேதி முதல் மூடிவிடத் தீர்மானித்து, ஆலைக்காரர் அதன் ௧௫௦௦ தொழிலாளர்களுக்கு அறிவித்திருக்கிறார்களாம்.

* * *

இந்தியாவில் செப்டம்பர் மாதத்தில் நிலத்திலும் நீரிலும் வசூலான சுங்கவரி ௪ கோடியே ௧௭ லட்சம் ரூபாய் என்றும், ஏப்ரல் துவங்கி செப்டம்பர் முடிய வசூலான சுங்கவரி மொத்தம் ௨௨ கோடியே ௬௬ இலட்சம் ரூபாய் என்றும் தெரிகிறது.

* * *

மும்தாஜ் பீகம் தமது குழந்தையான ஷாட் பீகத்துக்கு ரூ. ௭௫,௦௦௦ எழுதி வைத்ததாகவும், தம் குழந்தையைத் தம் தாயின் போஷணையில் விட்டதாகவும், குழந்தைக்கும் தாய்க்கும் ஒரு வழக்கு பம்பாய் ஐகோர்ட்டில் வந்திருக்கிறதாம்.

* * *

பர்மாவில் நெற்பயிர் சாகுபடியைப்பற்றி ௧௯௨௬—௨௭ வருஷத்திற்கு எடுக்கப்பட்டிருக்கும் உத்தேசக்கணக்கு ௯,௨௦,௬௫,௬௦௦ ஏகர் விஸ்தீரணம் நெல் சாகுபடி என்று காட்டுகிறது. சென்ற ஆண்டு உத்தேசக் கணக்கில் உள்ளதைவிட இது ௨,௧௧,௬௦௦ ஏகர்கள் அதிகமாகும்.

* * *

ஒரு ரூபாய்க்கு ௧௬ ஷில்லிங் நாணயமாற்று விகிதத்தைப் பொது ஜனங்கள் ஆதரிக்குமாறு பிரசாரம் செய்வதற்காக அமைக்கப்பட்ட இந்திய நாணயச் செலாவணி லீக்கின் முதற்கூட்டம், திரு கெல்காரின் தலைமையின்கீழ் அக்டோபர்-௴ ௧௨-ந்தேதி பூனாவில் கூடியதாம்.

* * *

மௌலானா ஷவுகத் அலி இந்து முஸ்லீம் ஒற்றுமைக்குப் பலமாய்ப் பாடுபட்டுவருவதான காங்கிரஸை முஸ்லீம்கள் ஆதரிக்க வேண்டுமென்றும், தீரர்கள் முழுதும் கப்பலைவிட்டு விலக மாட்டார்களென்றும், கடவுளின் கிருபையால் காங்கிரஸ் ஒருநாளும் முழுகாதென்றும் முஸ்லீம் வாக்காளர்களுக்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறாராம்.

## தமிழ் நாடு.

ஜினிவா சர்வதேச மகாநாட்டுக்குச் சென்றிருந்த திரு சி. பி. ராமசுவாமி அய்யர் திரும்பிச் சென்னைவந்து சேர்ந்தார்.

* * *

மைசூர் அரசாங்கத்தார், தாழ்ந்த வகுப்பார் சம்பந்தமான எல்லா விஷயங்களையும் கவனிக்கும் வேலையை ஐக்கியச் சங்கங்களின் ரிஜிஸ்திராரிடம் ஒப்படைத்துள்ளார்கள்.

* * *

தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் சங்க வருஷாந்திர மகாநாடு இவ் அக்டோபர்௴ ௨௫, ௨௬-ந்தேதிகளில், திரு முகுந்தலால் சர்க்கார் தலைமையின் கீழ், திருநெல்வேலியில் கூடும் என்று தெரிகிறது.

* * *

சென்னை ஐகோர்ட்டில் தற்காலிகமாக நியமிக்கப்பட்ட நீதிபதிகளான ஜஸ்டிஸ் வி. வி. சீனிவாசய்யங்காருடையவும், ஜஸ்டிஸ் வி. மாதவனுடையவும் உத்தியோக காலத்தை இன்னும் ஒரு வருஷத்திற்கு இந்தியா அரசாங்கத்தார் நீடித்திருக்கிறார்களாம்.

* * *

ராயபுரத்தில் ஈ. ஜி. கான்ஸாவ்ஸ் என்ற ஆங்கிலோ இந்திய வாலிபர் மில்லி பீகிரோடு என்னும் சிறுமியைக் கொன்றதாகச் சென்னை பிரெஸிடென்ஸி நீதிஸ்தலத்தில் நடந்துவந்த வழக்கில், எதிரி ஸெஷன்ஸுக்குக்கமிட் செய்யப்பட்டாராம்.

* * *

நாகை ரயில்வேத் தொழிலாளர் தகராறு சம்பந்தமாக, தொழிலாளர் சங்க நிர்வாகக் கமிட்டியில் முக்கிய அங்கத்தினரில் ஒருவரான ருத்ராபதி பிள்ளை கைதுசெய்யப்பட்டு, ஜாமீனில் விடப்பட்டிருந்தார். இப்பொழுது போலீசார் அவ்வழக்கை வாபீஸ் பெற்றுக்கொள்ள, ஜாமீன் ரத்தாயிற்றாம்.

* * *

கும்பகோணத்தில் ஒருபார்சலை உடைத்து அதிலிருந்த கடியாரத்தை எடுத்துக் கொண்டு, பதில் ஒரு கல்லை வைத்ததாகப் பழனி என்பவன் மீது வந்த வழக்கில் ஒரு சாட்சியைத் தவிர பாக்கி விசாரணை முடிந்துவிட்டதாம். வழக்கு அக்டோபர்௴ ௨௦ந் தேதிக்கு வாய்தாப் போடப்பட்டிருக்கிறதாம்.

* * *

கும்பகோணம் யதார்த்தவசனி பத்திராதிபர் மீது திரு. சத்தியவேலுபிள்ளை என்பவர் தொடுத்த வழக்கு, விசாரணைக்குக்குறிப்பிட்டிருந்த தேதியில் வாதி ஆஜராகாததால் ஏற்கனவே தள்ளுபடியாய் விட்டது. வாதியின் மறுவிசாரணை மனுமேல், கும்பகோணம் ஸப் கலெக்டரிடம் வழக்கு மறுபடி விசாரணைக்கு வந்திருக்கிறதாம்.

* * *

கும்பகோணம் திருட்டுக் கல்யாண வழக்கு அக்டோபர்௴ ௧௨-ந் தேதி விசாரணைக்கு வந்ததில், மாப்பிள்ளைக்குத் தமிழ் தெரியாதபடியால் தமிழைத் தெலுங்கில் மொழி பெயர்க்க ஒருவரைத் தருவிப்பதற்காக வாய்தாவை ஒத்திப் போடக் கேட்டுக்கொள்ளப்பட்டதால் நவம்பர்௴ ௬-ந் தேதிக்கு ஒத்திப் போடப்பட்டதாம்.

* * *

அதிராம பட்டிணத்தருகிலுள்ள சின்னமனை என்ற ஊரிலுள்ள சுவாமிநாதன் என்பவரும் இன்னும் ௧௮ பேருமான மீன் பிடிப்போருக்கும் சில முகம்மதியருக்கும் நடந்த சண்டையில் ஒரு முகம்மதியர் மரணமடைந்ததால், சுவாமிநாதன் முதலியோர் மீது வழக்குத் தொடரப்பட்டு, இப்பொழுது தஞ்சை ஸெஷன்ஸ் விசாரணையில் எதிரிகள் விடுதலையடைந்தனராம்.

* * *

சென்னைக் கலால் ஆலோசனைக் கமிட்டியின் அறிக்கையும், அதன்மீது சர்க்கார் உத்திரவும் வெளியாயிருக்கிறது. கமிட்டி சர்க்காரின் தற்போதைய கலால் கொள்கையையே ஆதரித்திருப்பதுடன், ௫௦ ஆயிரத்துக்குமேல் உள்ள நகரசபைகளில் உத்தியோகஸ்தரல்லாதவர்களை அதிகமாகக்கொண்ட லைசென்ஸ் அளிக்கும் போர்டுகளையும், இதர சிறு நகரசபைகளுள்பட நாட்டுப் புறங்களுக்கு ஆலோசனை போர்டுகளையும் அமைக்கச் சிபார்சு செய்திருக்கிறது. சர்க்கார் அதை ஏற்றுக்கொண்டிருக்கின்றனர்.

## தனவணிகர் நாடு.

### கோ. லெட்சுமிபுரம்.

ஸ்ரீ மீனாட்சி சங்கம்:—இச் சங்கத்தின் எட்டாவது மாதக் கூட்டம் நாளிது புரட்டாசித் திங்கள் ௨௧-ம் நாள் செவ்வாயன்று காரைக்குடி திருவாளர் சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தலைமையில், நடைபெற்றது. அவ்வமயம் திருவாளர்களான ராமநாதன் "விடாமுயற்சி" என்னும் விஷயம் பற்றியும், ந. சொ. அருணாசலச் செட்டியார் "சாவித்திரி" என்பதுபற்றியும், கொத்தமங்கலம் ராம. சுப்பிரமணியச் செட்டியார் "பெண்மணிகள் நிலை" என்பது பற்றியும், தி. கோ. ராமபத்திர சர்மா "நவராத்திரி" என்பது பற்றியும், காரைக்குடி ஆவி. லெ. அருணாசலச் செட்டியார் "சமயமும் பெண்களும்" என்பது பற்றியும் இனிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். தலைவர் முடிப்புரையாக பல இன்சொற்களை நிகழ்த்தியபிறகு வந்தனோபசாரம் சொல்லி மாலையிடப்பெற்று, சந்தனதாம்பூலம் வழங்கி, இரவு ௮-மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது எனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

°°° °°° °°°

### நெய்க்குப்பை.

இம்மதி ௨௭உ இரவு ௭½ மணி சுமாருக்கு இவ்வூர் சுப்பய்யா ஆலயத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு சுவாமிகள் கண்ணப்பநாயனாருக்கு மோக்ஷமளித்த அலங்காரம் சிறப்பாகச் செய்திருந்தார்கள். ஆனால் ஆலயம் மிகவும் சிறியதானதால் பிரகாரம் சுற்றி வருகிற மேல்புறத்தில் அலங்காரமண்டபம் அமைத்திருந்தார்கள். ஜனத்திரள்களும் ஏராளமாகவே இருந்தது. அந்நிலைமைக்குச் செய்யவேண்டியதாவது கயிறு ஒன்று கொண்டுவரச்செய்து கட்டி, ஆண்பாலர் ஒரு பக்கமும் பெண்பாலர் ஒரு பக்கமும் நின்று தெரிசனை செய்யும்படி செய்திருக்கலாம். அவ்விதம் இல்லாததால் பெண்பாலர்கள் மேல் இளம் ஆண்பாலர்கள் இடித்துத் தள்ளியதைப் பார்க்க மிகவும் பரிதாபகரமாய் இருந்தது. இக்கூட்டத்தில் விலைமாதர்கள் கூட்டமே பெரிதாயிருந்தது. ஆராதனை முதலானதுகள் முடிந்தன. (வெண்ணீரு) முதலியவைகள் வாங்காதவர்கள் (௱)க்கு (௧௫)க்குமேலிருக்கலாம். கூட்டம் கலைந்தது. அந்தசமயத்தில் ஒரு செட்டியார் 'அடே (அப்பா) ஜனத்திரள் ஏராளம். (சுண்டலை) ஒரே திரளமாய் கொடுத்துவா' என்று வாக்கியத்தை மொழிந்தார். இந்த யோசனை சரியாக எட்டியது தவிர ஒரு கயிறுகட்டி யேற்பாடு செய்யவரவில்லை. இதை அவசியம் பிரசுரம் செய்யவேணுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். அவ்விதம் செய்தால் இனிமேலாவது நன்கு நடைபெறும் என்று பிரயாணவாசி எழுதுகிறார்.

°°° °°° °°°

### கூழிபிறை.

நமது ஆப்த நண்பர் சீமான் ஆரு. மு. பொய்சொல்லா மெய்யப்ப செட்டியாரவர்கட்கு நடந்த கல்யாணத்தில் நமது சிவனடியார் திருக்கூட்டத்திற்கு நன்கொடை ரூ ௧௬ தந்துள்ளார்கள். மணமக்கள் நீடூழி வாழ வேண்டுமாய் இறைவனை வேண்டும் அன்பன் தெ. நா. ராம. சோமசுந்தரன் (உபகாரியதரிசி) எழுதுகிறார்.

°°° °°° °°°

### தனவைசிய ஊழிய சங்கம்.

நடப்பு வருடத்திற்கு திருவாளர்களான பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியார் அவர்களைத் தலைவராகவும் மு. காசிவிஸ்வநாதன் செட்டியார் அவர்களை காரியதரிசியாகவும் நியமித்திருக்கிறது.

---

### பினங்கு.

நாளிது புரட்டாசித் திங்கள் ௧௭-ம் நாள் ஆதித்தவாரம் மகநக்ஷத்திரத் தாதன்று மகாத்மா காந்தியடிகள் பிறந்தநாள் நக்ஷத்திரத்தை முன்னிட்டு இங்கு தீ. சொ. நா அ. முக. கிட்டங்கியின் சார்பாக மகாத்மாஜி படத்திற்கு அலங்காரம் செய்து தூபதீபம் காட்டி காந்தி பிள்ளைத்தமிழும் பாரதியார் பாடலும் பாடப்பெற்றது. அன்ன நிவேதனம் செய்து ஏராளமான ஏழைகளுக்கு அன்னமளிக்கப் பட்டதென்றும் இனி எவ்வருஷமும் இதுபோல் நடத்த தீர்மானித்திருக்கிறது பாராட்டத்தக்கதென்றும் ஒரு நிருபர் எழுதுகிறார்.

## காந்தி ஆசிரமம்.

கீழ்கண்ட தொகைகள் திரு. சித. நா. லெ. லெட்சுமணன் செட்டியார் மூலமாய் வரப்பெற்றது. இந்தப்பணம் ஆசிரமத்தில் படிக்கும் ஒரு ஏழை மாணவனுக்கு உபயோகப்படுத்தப் படும் என்று திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியார் அறிவிக்கிறார்.

உலாந்தா ரூ.

மைடான் டில்லி

| | |
|---|---|
| திருவாளர்கள். | |
| கரு. பெரி. பெ. | ௧௫ |
| அள. கரு. | ௧௦ |
| ராம. அ. சுப. | ௧௦ |
| ச. இ. மு. முகமதலி-முகமது கோஸ் | ௧௦ |
| மு. பாவாச்சி சாகிப் கம்பனி | ௧௦ |
| கரு. கும. | ௫ |
| ஆத. ராம. மு. | ௫ |
| மு. மு. நா. | ௫ |
| ராம. அழ. | ௫ |
| அழ. சுப. அரு. | ௫ |
| தெ. நா. வா. ப. ராம. | ௫ |
| அரு. சொ. | ௫ |
| சா. மு. உ. கம்பனி | ௫ |
| சி. அ. கம்பனி | ௫ |
| ஓ. அ. கம்பெனி | ௫ |
| சுப. பெரி. | ௩ |
| பழ. சா. அ. | ௩ |
| பழ. சுப. மு. | ௩ |
| மு. மு. பழ. | ௨ |
| சு. கும. | ௨ |
| கு. பழ. சு. | ௨ |
| அழ. சுப. | ௨ |
| ராம. ராம. | ௨ |
| செ. ஜெ. அபிபுமரைக்காயர் கம்பனி | ௨ |
| சிவராமன் செட்டியார் | ௨ |
| அ. ந. அ. | ௧ |
| **பிஞ்சை** | |
| அ. மா. மீ. | ௫ |
| சி. வெ. நா. சித. | ௩ |
| ராம. மரு. | ௩ |
| முரு. அ. அருணாசலம் பிள்ளை | ௩ |
| நா. சு. முனுசாமி (பத்துசிராங்கான்) | ௩ |
| கிருஷ்ணன் | ௧ |
| அ. ராம. (மைடான் பிராண்டான்) | ௫ |
| ராம. நா. (பிராண்டான்) | ௨-௫ |
| ஏ. எஸ். பி. மரைக்காயர் (லங்சா) | ௫ |
| **திபிங் திங்கி** | |
| அ. ஆ. | ௩ |
| மு. பழ. | ௨ |
| க. மு. | ௧ |
| அ. சுப்பய்யா செட்டியார் (பிடா காங்கான்) | ௩ |
| **சியாந்தார்** | |
| வெ. சு. ராம. ப. மெ. | ௫ |
| பெரி. சித. பழ. | ௧ |
| மீ. கண்ணப்ப பிள்ளை (தென்கரை) | ௫ |

ஆக உலாந்தா ரூ. ௧௭௬-௨௫

---

ஒரு ஷில்லிங்கில், ஒரு ஷில்லிங்கும் மூன்று பார்த்திங்கும் மதிப்புள்ள வெள்ளி இருக்கின்றதாம்.

* * *

உலகத்தின் ஜனத்தொகை ௨௫௦ ஆண்டுகளில் இரட்டிப்பு மடங்காய் விருத்தியாகிறது என்று கணக்கிடப் பட்டிருக்கிறது.

* * *

சந்திரனின் மேற் புறத்தில் சீதோஷ்ண நிலைமை பூஜ்யத்திற்குக் கீழே, ௪௩௦ முதல் ௯௦௦ டிகிரிகள்வரை ஆகும் எனப்படுகிறது.

* * *

மிடில் செக்ஸ் வைத்திய சாலையில் உசு நோயாளிகளுக்கு, சென்ற மூன்று ஆண்டில், எப். ஜீ. லீ என்பவர் தமது இரத்தத்தைக் கொடுத்தாராம். அதில் எழு பேர் இறந்து விட்டார்களாம். அவர்கள் இறந்ததை லீ நேரே பார்க்காமலிருந்தும், அவர்கள் இறந்த அதே நிமிஷத்தில், லீ தமது புஜத்தில் பலத்த வலியால் உபத்திரவப்பட்டாராம். வைத்தியர்களுக்கு இதன் மர்மம் விளங்க வில்லை எனப்படுகிறது.

---

## விநோதக் கொத்து.

நாத்தினர்:—அடியே! இப்ப ஒனக்கு எத்தனை மாசம்?

தம்பி மனைவி:—எழு மாசம்.

நாத்தினர்:—சரி. ஒனக்குப் பிறக்கிறது ஆம்பிள்ளைப் பிள்ளையா யிருந்தால் எம்மகளைத்தான் கட்டவேணும். அவளுக்கு இப்ப ஏழுவயசுதான்.

தம்பி மனைவி:—சாமி ஐயாண்ணு ஆம்பிளைப்பிள்ளையாப் பிறந்தாச்சரி. முறைபெல்லாம் பெருந்தோதிலே செய்வியளா?

நாத்தினர்:—அந்தக்காலத்து முறைப்படி நல்லாச் செய்யிரம். இப்பவே வண்டி வண்டியாச் சாமான் வாங்கி வச்சிருக்கம். மாமியார் சாமானுக்கு ரெம்பத்தாரம்.

ஃ ஃ ஃ

கிழவி:—அடி ரத்னம்! உன் ஆம்படையான் மதுரையிலே இறந்துட்டானும். விளையாண்டது போதும். மதுரைக்குப் போகணும். வா.

குழந்தை:—நீ ஆத்துக்குப்போ! இன்னொருதரம் உப்புத்தோடு போட்டுட்டு வாரேன்.

கிழவி:—அடி பைத்தியமே! நான் சொல்லுவது விளங்கலையா? வா! இங்கிட்டு.

குழந்தை:—என் ஆம்படையான் ஏன் இறந்துட்டான்?

கிழவி:—முடியாமலிருந்து நேற்றுச் செத்துப்போய்விட்டான்.

குழந்தை:—போனாப்போகட்டும். மதுரைக்கு நீ போய்ட்டுவா. நான் வல்லே.

ஃ ஃ ஃ

மாப்பிள்ளை:—மாமா! ஐந்நூறு ரூபாய் தந்தாற்றான் நான் ருதுசாந்தி முகூர்த்தத்துக்கு வரமுடியும்.

மாமன்:—ஓஹோ! இவ்வளவு முறுக்கா இப்பொழுது வந்துவிட்டது? அன்று தினம் பெண்ணை வேறொருவனுக்குக் கொடுத்து விடுகிறேன்!

மாப்பிள்ளை:—என்ன மாமா! எல்லா மாப்பிளைகளைப் போலுமே நானும் கேட்கிறேன். முடிந்தவரையிலும் சிரமப்பட்டுப்பாருங்கோ! ரூபாய் கிடைக்காவிட்டால், நான் சும்மாவே சாந்திமுகூர்த்தஞ் செய்து விடுகிறேன். மாமா! வேறு யாரையும் மாப்பிளையாக்கிடாதிங்கோ!

ஃ ஃ ஃ

பாட்டி:—ஏண்டா! சங்கரா! சங்கத்துக்கே போகிறாயே? அங்கே என்ன வெட்டி முறிக்கிறாய்? ஒங்க ஐயாவைப் போல் வீட்டுத் திண்ணையிலேயே இருக்கப்பிடாதோ?

பேரன்:—பத்திரிகை படிப்பதற்காகப் போகிறேன். வீட்டிலேயே இருந்தால் பொழுது எப்படிப்போகும்?

பாட்டி:—இத்தனை நாளாப் படிச்சுப் படிச்சு என்ன பொதியைப் பிடிச்சுக்கினு வந்தாய்? எதுக்கும் எதிரிடைதான் பேசுகிறாய்! வரவரப் புத்தியும் மெத்தக் கெட்டுப்போச்சு.

பேரன்:—என் புத்தி கெட்டுப் போகவில்லை; வளர்ந்து மாற்றமடைந்திருக்கிறது. படியாததினாலே தான் உன்புத்தி வளராது மாசடைந்திருக்கிறது. அதினாலேதான் புத்தி என்பது இன்னதென்றே உனக்குத் தெரியவில்லை.

பாட்டி:—எங்களையும் அந்த நாளையிலே பள்ளிக்கூடத்திலே வச்சிருந்தால் எனக்குப் பதில் சொல்லமுடியும்

ஃ ஃ ஃ

வக்கீல்:—நீதிபதியே! கோவிந்தபுரம் சுவாமிகளுக்கே முதல் தீர்த்தம் பாத்தியப்படி கொடுக்கப்படவேணும்.

ஐரோப்பிய நீதிபதி:—வேணுமென்கிற தண்ணீரைப் பெற்றுக்கொள்ளட்டுமே. அவ்வூரில் தண்ணீர்ப் பஞ்சமா ஏற்பட்டிருக்கிறது?

வக்கீல்:—கோவிலில், சுவாமி பிரசாதமாகக் கொடுக்கப்பெறும் துளசிதீர்த்தத்தில் முதல் மரியாதை கிடைக்கணும்.

நீதிபதி:—தண்ணீர் வாங்கிக் கொள்ளுவதில்கூட வழக்கா? பொங்கல் சாப்பிட்டு விட்டுக் கைகழுவுவதற்கா தண்ணீர் கொடுப்பது வழக்கம்? முதலில் இரண்டு டம்ளர் ஜலத்தை அவருக்குக் கொடுத்துவிடக்கூடாதோ?

வக்கீல்:—அப்படி இல்லை! சுவாமியினுடைய தெய்வத்தன்மை பொருந்திய தீர்த்தம் ஆசமனம் செய்வதற்காகச் சிறிது கொடுப்பது வழக்கம்.

நீதிபதி:—ஓ! அப்படியா? இரண்டாந்தரம் உமது சுவாமிகள் அதைப் பெற்றுக்கொண்டால் என்ன? அப்படியானல் உமக்குத் தொழில் கிடைக்காதோ?

வக்கீல்:—உங்களுக்கும் வேலைத் தொந்தரவு அதிகமாக இராது.

ஃ ஃ ஃ

வைதிகர்:—அடே! தொட்டுடாதே எட்டிப்போ! எட்டிப்போ!

வழிப்போக்கன்:—அட, வேணுமின்னு நீர்தான் விலகிப்போமே! ரோட்டு என்ன ஒங்க அப்பன்வீட்டா? பொதுத்தெருவில் நீர் என்ன அம்பலம் பண்ணுரது.

வைதிகர்:—ஏண்டா! நீ என்ன பிள்ளை? பிராமணாள் பக்கத்திலே சூத்ரன் வரலாமோ?

வழிப்போக்கன்:—ஓய்! நான் ஆம்பிளைப்பிள்ளைதான். நீ கட்டியிருக்கிற அழுக்குக் கந்தையைப் பார்த்தாலும் யாரும் உன் பக்கத்திலே வரமாட்டான் காணும்.

வைதிகர்:—பகவான்தான் உனக்குக் கூலி கொடுக்கணும்.

வழிப்போக்கன்:—பகவானுக்கு கண்ணிருந்தால் "சூத்ரன்" என்று எல்லோரையும் துவேஷித்துத் தூரத்தும் உன்னைச் சும்மா விடமாட்டான்.

ஃ ஃ ஃ

டிக்கட் கலெக்டர்:—அம்மா! என்ன செல்லாத பழைய டிக்கட்டைக் காட்டுகிறீர்கள்? இரட்டிப்புச் சார்ஜு தரவேணும்.

படிக்காத பெண்:—ஐயா! பணங் கொடுத்துத்தான் இதை மதுரையிலே வாங்கினோம். படிக்காததினால் அதிலே எழுதியிருக்கிறது எங்கள் கண்ணுக்குத் தெரியாது.

டிக்கட் கலெக்டர்:—யாரிடத்தில் வாங்கினீர்கள்?

படிக்காத பெண்:—ரயில்க் கூலிக்காரன் தான் வாங்கித்தந்து வண்டியில் ஏத்திவிட்டான்.

டிக்கட் கலெக்டர்:—போக்கிரிப் பயல் பழைய டிக்கட்டைத் தந்து உங்களை ஏமாற்றிவிட்டான். படித்திருந்தால் ஏமாறுவீர்களா? உங்கள் பிள்ளைகளையாவது படிக்க வையுங்கள்.

ஃ ஃ ஃ

பைத்தியக்காரன்:—ஐயா! நான் ஒரு அவுன்ஸ் மையை, நீங்கள் கலக்கித் தந்த மருந்தென்று குடித்துவிட்டேன். என்ன செய்கிறது?

டாக்டர்:—போரும்! பைத்தியமே! ஒரு பெரிய ஒட்டுத்தாள் வாங்கி விழுங்கும்.

---

## பலதிரட்டு.

சாஸ்திர ரீதியில் ௭௯-வகை ரோஜாச் செடிகள் இருக்கின்றனவாம்.

ஃ ஃ ஃ

அமெரிக்காவில் கோடீசுவரர்களின் எண்ணிக்கை வரவரக்குறைந்து கொண்டே வருகிறதாம். என்றாலும் இப்பொழுது ௧௧,௦௦௦ கோடீசுவரர்கள் இருக்கிறார்களாம்.

ஃ ஃ ஃ

"மனிதன் ஒரு சிறுமி தன்னைப்பிடித்துக் கொள்ளும் வரையிலும், அவளைத் துரத்துகிறான் என்பது நகைக்கத்தகும் ஓர் விஷயம்" என்று ஸ்டார்லிங் என்பவர் கூறுகிறார்.

ஃ ஃ ஃ

ருமேனியாவில் உள்ள உப்புச்சுரங்கங்களில் ஒன்றில் உள்ள யோசேப்பு காலரி என்னும் ஒரு குகையில், மனிதர் பேசினால் அது பதினாறு தடவை எதிரொலி செய்கிறதாம்.

ஃ ஃ ஃ

பத்துமணி நேரம் உடம்பை வருத்தி உழைத்தால் தசை நரம்புகளுக்கு எவ்வளவு தளர்ச்சி உண்டாகுமோ அவ்வளவு தளர்ச்சி, நான்குமணிநேரக் கடின ஆலோசனையாலும் உண்டாகிறதாம்.

ஃ ஃ ஃ

"மணவாழ்க்கையில் கணவனும் மனைவியும் ஐம்பது ஐம்பது பங்கெடுத்துக்கொண்டால் நூற்றுக்கு நூறு இன்பம் பலனாக கிடைக்கும்" என்று லீத் என்பவர் கூறுகிறார்.

ஃ ஃ ஃ

"மனிதனுக்குக் கிடைத்திருக்கும் கொடைகளெல்லாம் சிறந்தது தொழில் செய்யும் சக்தியும், தொழிலில் விருப்பமும், தொழிலை அனுபவித்தலுமே" என்று வாலிங்டன் என்பவர் கூறுகிறார்.

ஃ ஃ ஃ

"தாம் எதில் சேர்ந்தவர் என்று அடக்கமாய்ப் பேசும் அநேகர் தங்களைப்பற்றிப் பிறர் அவ்விதம் கூறினால் கோபம் கொள்ளுகிறார்கள்" என்று ஈஸ்ட்போர்ன் என்பவர் கூறுகிறார்.

ஃ ஃ ஃ

இந்தியாவில் இப்பொழுது உள்ள இருப்புப்பாதைகளின் மொத்த நீளம் ௩௮,௫௭௬ மைல்கள். அவை அமைக்கப்படச் செலவழிந்த தொகை ௭௫௪ கோடி ரூபாய். அவற்றில் பிரயாணம் செய்வோரின் சங்கியை வருஷம் ஒன்றுக்கு ௬௦ கோடி. அவற்றின் மூலம் போக்குவரத்துசெய்யப்படும்பொருள்களின் மொத்தம் வருஷம் ஒன்றுக்கு எட்டு கோடி டன்கள். (ஒருடன்னுக்கு ௨,௨௪௦ இராத்தல்.) ௧௯௩௨-ம் ஆண்டுக்குள் இன்னும் ௬,௦௦௦ மைல்கள் நீளம் புதிய பாதைகள் போடப்படுமாம்.

ஃ ஃ ஃ

ஒரு அமெரிக்கக் கம்பெனி, தான் பிற நாடுகளுடன் வியாபாரம் செய்து பத்து வரவு வைத்துக் கொண்டதில், பின்வரும் நாட்டார்களில் நூற்றுக்குப் பின்வரும் விகிதப் பேர்களிடமிருந்து மிகவும் வற்புறுத்திப் பாக்கியை வருவிக்க வேண்டியதாயிற்று என்று கணக்கெடுத்திருக்கிறது;—ஆங்கில நாடும் கானடாவும், 19.0%; பிரஞ்சும் ஜெர்மனியும், 19.0%; ஸ்காட்லாந்தியர், 20%; அமெரிக்கரும், போலந்தியரும், 20.1% அயர்லாந்தியர், 23,1%; ஸ்காந்தி நாவியர், 250%; ஹீப்ருக்கள், 27.6%; துருக்கியர், 34.1%; கிரேக்கர், 38.2%: இத்தாலியர், 38.7%; ரஷ்யர், 46.0%.

ஃ ஃ ஃ

ஷெப்பீல்டில் இடிவிழுந்த ஓரிடத்திற்கு அருகில் நின்று கொண்டிருந்த ஒரு மனிதன் ஊமையாய்ப் போய்விட்டானும். ராணுவத்தில் பீரங்கிக் குண்டு வெடித்த சத்தத்தால் ஊமையாய்ப் போன துருப்பு ஒருவன் நார்போக்கைச் சேர்ந்த பேகன் ஹாமில் ஓவியத் தொழில் புரிந்து கொண்டிருக்கையில் ஊமைத்தனம் நீங்கிற்றும். அவனது ஏணி சாயவே, ஊமைத்தனம் போய், "ஓ!" என்று கத்தினானும். மூளையை மிகவும் சாமர்த்தியமாய் ஆராய்ந்தவர்கூட இதன் காரணம் என்ன என்பதைச் சொல்லமுடியவில்லை. அவர்கள் சொல்ல முடிந்ததெல்லாம்கூடி, பேசும்பொழுது தொண்டையையும் நாவையும் அண்ணத்தையும் குரல்வளைகளையும் அவ்வவற்றின் வேலையைச் செய்ய மூளை அல்லது அதன் பாகம் தூண்டுவதற்காக அமைக்கப்பட்டுள்ள இயந்திர அமைப்பு மிகவும் சிக்கலானது என்பதே எனப்படுகிறது.

---













## ஏலவிற்பனை.

அரு. அரு. சோம. கடை (மனு நெ 1925-ம் வருஷத்திய 264) இன்ஸால்வெண்ட் விஷயத்தில், மெஸ்ஸர்ஸ் டௌடன் கம்பெனியார், சென்னை அபிஷியல் அஸைனியின் உத்திரவுப்படி, 1926-ம் வருஷ அக்டோபர்மீ 22உ மாலை 5 மணிக்கு அந்தக்கட்டிடங்களிலே, பகிரங்க ஏலத்தில்,

இன்ஸால் வெண்ட் ஆனவருக்குக் கீழ்க் கண்ட சொத்துக்களில் உள்ளதும், அச்சொத்துக்களுக்கு உள்ளதுமான எல்லாச் சுதந்திரமும், பாத்தியதையும், உரிமையும் விற்கப்படும்.

சென்னை, ஜியார்ஜ் டவுன், முத்தியால் பேட்டை பவழக்காரத்தெருவில் உள்ள, கதவிலக்கம் 134 உம் 135 உம் கொண்டவீடும் நிலமும். சென்னை ஸப் ரிஜிஸ்டிரேஷன் ஜில்லாவையும், சென்னை செங்கல்பட்டு ரிஜிஸ்டிரேஷன் ஜில்லாவையும் சேர்ந்தது. வடக்கு, ஸர்வே நெ. 3219; தெற்கு, ஸர்வே நெ. 3222; கிழக்கு, ஸர்வே நெ. 3218; மேற்கு, ஸர்வே நெ. 3209; இந்த நான்கெல்லைக்குட்பட்டது. ஸர்வே நெ. 3220 உம் 3221 உம், ஸர்டிபிகேட் நெ. 1127-ம் உடையது. விஸ்தீரணம் சற்று ஏறக்குறைய 233 சதுர அடி உள்ளது.

சென்னை, ஜியார்ஜ் டவுன், தம்புச் செட்டிதெருவில், கதவிலக்கம் 127 உம், 1282 உம் கொண்ட வீடும் மனையும். சென்னை ஸப்ரிஜிஸ்டிரேஷன் ஜில்லாவையும், சென்னை செங்கெல்பட்டு ரிஜிஸ்டிரேஷன் ஜில்லாவையும் சேர்ந்தது. வடக்கு, ஸர்வே நெ. 3217; தெற்கு, ஸர்வே நெ. கள் 3222 உம் 3223 உம்; கிழக்கு, ஸர்வே நெ. 3313; மேற்கு ஸர்வே நெ. கள் 3221 உம் 3219 உம்; இந்த நான்கெல்லைக்குட்பட்டது. பழய ஸர்வே நெ. 2341 உம் புது ஸர்வே நெ. 3218 உம், ஸர்டிபிக்கேட் நெ. 5115 உம் உடையது. விஸ்தீர்ணம் சற்று ஏறக்குறை 1502 சதுர அடிகள் உள்ளது.

குறிப்பு:—மேற்படி இரண்டுவீடுகளும் ஒரே பெரிய கட்டிடமாக, சற்றேறக்குறைய 1735 சதுர அடி விஸ்தீரணம் கொண்ட நிலத்தில் பவழக்காரத்தெருவில் வாயிற்புறமும் தம்புச்செட்டி தெருவில் ஒரு வாயிற்படியும் கொண்டதாக, புதுப்பித்துக் கட்டப்பட்டிருக்கிறது.

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு
1926-ஞு அசல் நெ. 256.

பஞ்சாப கேசய்யர் } வாதி

நடேசன் செட்டியார் வகையரா } பிரதிவாதிகள்

இந்த நம்பரில் தாவாப்படும் இடம் கழினிவாசல் கிராமம் பங்காளிகளுக்குப் பொதுபாத்தியமான இடமென்று டிக்ளரேஷன் பெறவும் பிரதிவாதிகள் அதில் எவ்வித அக்கிரமச் செய்கையும் செய்யாதிருக்கும்படி சாஸ்வத இஞ்சக்ஷன் பெறவும் தென்புறம் இடத்தில் பிரதிவாதிகள் மண்ணைகொட்டி லெவலை உயர்த்தி இருப்பதை எதாஸ்திதி செய்து இடத்தை வறபற்றவும் மேல்படி கிராமம் பங்காளிகள் எல்லாருக்குமாக வாதி பிரகிருத வழக்கு செய்திருப்பதில் ஷை நம்பரும் 29-10-26-க்கு வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஷை விஷயமாய் எதாவது ஆக்ஷேபனை உள்ள பங்காளிகள் கோர்ட்டில் ஆஜராகி தங்கள் ஆக்ஷேபனைகளைத் தெரிவித்துக் கொள்ள வேண்டியது.

M. R. சிவராமய்யர்,
வக்கீல்.
தேவகோட்டை
4-10-26.

ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

